## சாகித்திய அக்காதெமியின்
## சமீப வெளியீடுகள்

இந்திய இலக்கியச் சிற்பிகள் வரிசை

கபீர்
பிரபாகர் மாச்வே — ரூ. 2-50

கேசவஸுதர்
பிரபாகர் மாச்வே — ரூ. 2-50

ராஜா ராம்மோகன் ராய்
சௌமியேந்திரநாத் தாகூர் — ரூ. 2-50

கன்னட இலக்கிய வரலாறு
ர. ஸ்ரீ. முகளி — ரூ. 20-00

வசவண்ணர் வாக்கமுது
எஸ். எஸ். மாளவாட — ரூ. 8-00

## அடுத்த வெளியீடுகள்

தமிழ் இலக்கிய வரலாறு
மு. வரதராசன் — ரூ. 12-00

ஆரோக்கிய நிகேதனம் (வங்க நாவல்)
தாராசங்கர் பந்த்யோபாத்யாய
ரூ. 14-50

Makers of Indian Literature
Kamban
S. Maharajan — Rs. 2-50


## சாகித்திய அக்காதெமி

புதுதில்லி 1 — சென்னை 6

பம்பாய் 14 — கல்கத்தா 29



ஓவியம் : கே. எம். ஆதிமூலம்

# ஸால்ஸனிட்ஸினின் நோபல் உரை

ஆதிவாசி ஒருவன் எதையோ கண்டெடுத்து—அது கடல் கரை தள்ளிய அதிசயப் பொருளா, வானத்திலிருந்து விழுந்த அபூர்வமா?—குழம்பி நின்றதுபோல்: நுண்ணிய வளைவுகளுடன் முதலில் மங்கலாக, பிறகு பிரகாசமாக ஒளி வீசத் தொடங்கிய அதை அவன் அப்புறமும் இப்புறமுமாகத் திருப்பிப் பார்த்து, அதை என்ன செய்வதென்று ஆராய முயன்று, அதற்கான உயரிய நோக்கங்களைப் பற்றிக் கற்பனையும் செய்யாமல், அவன் உணர்வுக் கெட்டிய வரை மட்டும் ஓர் அன்றாட வாழ்க்கைப் பயன் தர முயல்வதுபோல்.

நாமும் அப்படித்தான், கலையைக் கையில் வைத்துக்கொண்டு தன்னம்பிக்கையுடன் அதன் எஜமானர்களாக நம்மை நினைத்துக் கொள்கிறோம். நிச்சயத்துடன் அதை இயக்குகிறோம்: புதுப்பிக்கிறோம்; மாற்றி அமைக்கிறோம்: வெளிக்காட்டுகிறோம். அதைக் காசுக்காக விற்கிறோம். அதிகாரத்தில் இருப்பவர்களை மகிழ்விக்க அதைப் பயன்படுத்துகிறோம். கேளிக்கைக்காக ஒரு கணம் அதை நாடுகிறோம்—பாமரத்தனமான பாடல்கள், இரவு விடுதிகள் வரை: இன்னொரு கணம் கைக்குக் கிடைத்த ஆயுதமாக எடுத்துக்கொண்டு—அது சார்க் ஆனாலும் சரி, குறுந்தடி ஆனாலும் சரி—அரசியலின் நிரந்தரமற்ற தேவைகளுக்காகவும், குறுகிய மனப் பான்மை கொண்ட சமூக ஆதாயங்களுக்காகவும் நாடுகிறோம். ஆனால் நம் காரியங்களால் கலை களங்கப்படுவதில்லை. அதனால் தன்னுடைய இயற்கையான தன்மையிலிருந்து மாறுபடுவதுமில்லை. ஆனால் ஒவ்வொரு முறையும், ஒவ்வொரு பயன் முறையிலும் அதனுடைய ரகசிய உள்ளொளியில் ஒரு பகுதியை நமக்குத் தருகிறது.

ஆனால் அந்த உள்ளொளியை முழுமையாக நாம் எப்போதாவது கிரகித்துக் கொள்வோமா? கலையைத் தான்தான் விஞ்ஞானபூர்வமாக விளக்கியிருப்பதாக, அதன் பல முகங்களைக் கண்டு சொன்னதாக யாரால் கூறமுடியும்? ஒருவேளை முந்தைய காலத்தில் யாரோ அதைப் புரிந்து கொண்டு நமக்குச் சொல்லியிருக்கலாம். ஆனால் அதை வைத்துக்கொண்டு நீண்ட நாள் நம்மால் திருப்தியுடன் இருக்க முடியவில்லை. நாம் செவி கொடுத்துக் கேட்டோம், புறக்கணித்து வெளியே அப்போதே தூக்கி எறிந்துவிட்டோம். எப்போதும்போல் அவசரமாக, புதிதானது என்பதற்காக மட்டுமே மிகச் சிறந்ததையும் விலைகொடுக்கத் தயாராக. நம்மிடம் மறுபடியும் பழைய உண்மை சொல்லப்படும்போது ஒரு காலத்தில் அது நம்மிடமிருந்தது என்பதை நாம் நினைவில்கூட கொள்ளமாட்டோம்.

ஒரு கலைஞன் ஒரு சுதந்திர ஆன்மீக உலகத்தின் கர்த்தாவாய்த் தன்னைக் காண்கிறான். இந்த உலகத்தை, அதன் மனிதர்களைப் படைக்கும், அந்தச் செயலுக்கான முழுப் பொறுப்பைச் சுமக்கவேண்டிய பணியைத் தன் தோள்கள்மேல் ஏற்றி வைத்துக் கொள்கிறான். ஆனால் அதன் கீழ் அவன் நசுங்கிப் போகிறான். மனிதன் மேதையானாலும், இவ்வளவு சுமையைத் தாங்க இயலாதவன், தன்னையே உயிரியக்கத்தின் மையமாகச் சொல்லிக் கொண்டாலும், மனிதன் பொதுவில் சம நிலையான ஆன்மீக அமைப்பை உருவாக்க முடியவில்லை என்பதைப்போல். துரதிருஷ்டம் அவனை விழுங்கும்போது அவன் காலங்காலமாகச் சொல்லப்படும் உலகின் அமைதியின்மையின் மீது, இன்றைய குலைந்த ஆத்மாவின் சிக்கல்மீது, ஜனங்களின் முட்டாள்தனத்தின் மீது பழியைச் சுமத்துகிறான்.

இன்னொரு கலைஞன், தனக்கும் அப்பால் உள்ள உயர்ந்த சக்தியை உணர்ந்து, மகிழ்ச்சியுடன் அடக்கமான, பயிற்சி பெறுபவனைப்போல் கடவுளின் உலகின் கீழ் செயல்படுகிறான். அப்போது எழுதப்பட்ட, வரையப்பட்ட ஒவ்வொன்றிற்கும், அவன் படைப்பைக் காணும் ஒவ்வொரு ஆத்மாவுக்கும் அவனுடைய பொறுப்பு மிகக் கடுமையானதாக ஆகிவிடுகிறது. ஆனால் அதற்குப் பதிலாக, இந்த உலகைப் படைத்தவன் அவன் இல்லை. இயக்குபவனும் அவன் இல்லை, அதனுடைய அஸ்திவாரங்களைப் பற்றிய சந்தேகம் ஏதும் இல்லை. உலகத்தின் இயைந்த தன்மையைப்பற்றி, மனிதனின் பங்கு பற்றி கலைஞன் மற்றவர்களைவிடப் பிரக்ஞையுடன் இருக்க வேண்டும்; அவ்வளவுதான். தன்னைச் சுற்றியிருக்கும் மனிதர்களுக்கு அதைக் கூர்மையாக எடுத்துச் சொல்லவேண்டும். துரதிருஷ்டத்திலும், உயிரியக்கத்தின் மிகக் கீழ் நிலையிலும்—வறுமையில், சிறையில், நோயில்—

உறுதியான இயைவைப் பற்றிய, அமைதியைப் பற்றிய உணர்வு அவனை விட்டு அகலுவதில்லை.
ஆனால் கலையின் பகுத்தறிவின்மை, பிரமிக்கவைக்கும் திருப்பங்கள், முன் கூட்டிச் சொல்ல முடியாத கண்டுபிடிப்புகள், மனிதர்களைத் தகர்த்துவிடும் அதன் பாதிப்பு—இவையெல்லாம் கலைஞனின் பார்வையால், கலையாக அவனுள் உருவாகும் விதத்தினால், தகுதியற்ற அவன் விரல்களில் எழும் படைப்பினால் சொல்லித் தீர்த்துவிட முடியாத அளவுக்கு மாயசக்தி கொண்டவை. கலை இல்லாத அளவுக்குப் புராதனமான மனித வளர்ச்சியின் நிலையைப் புதைபொருள் ஆராய்ச்சியாளர்கள் கண்டுபிடிக்கவில்லை இன்னும். மனித குலத்தின் தோற்றகால மங்கலில் அதை நாம் பெற்றோம். அதை மிகத் தாமதித்தே நாம் உணர்ந்தோம். மிகத் தாமதித்தே கேட்டோம். எந்தக் காரியத்திற்காக நாம் இந்தப் பரிசைப் பெற்றிருக்கிறோம்? இதை வைத்துக்கொண்டு என்ன செய்வது?
கலை குலைந்து, அதன் உருவங்களை இழந்து நசித்துப்போகும் என்று சொன்னவர்கள் தவறு செய்தார்கள். இனியும் தவறு செய்வார்கள். செத்துப்போகப் போவது நாம்தான்—கலை நிலைக்கும். நம்முடைய அழிவு நாளிலாவது அதனுடைய பல முகங்களையும், சாத்தியக் கூறுகளையும் நாம் புரிந்து கொள்வோமா!
எல்லாவற்றிற்குமே ஒரு பெயர் வந்துவிடுவதில்லை. சில விஷயங்கள் வார்த்தைகளுக்கும் அப்பால் இட்டுச் செல்கின்றன. உறைந்துபோன, இருட்டித்துப்போன ஆத்மாவையும் கலை, மேன்நிலை ஆன்மீக அனுபவத்திற்கு எழச்செய்யும். கலையின் மூலம் நமக்கு—பகுத்தறிவினால் உண்டாக்க முடியாத காட்சிகள் — மங்கலாக, சிறிது நேரமே கிடைக்கின்றன.
குழந்தைகளின் கதைகளில் வரும் முகம் பார்க்கும் கண்ணாடியைப் போல்: நீங்கள் அதனுள் பார்த்தால் நீங்கள் காண்பது—உங்களையல்ல—ஒரு கணத்திற்கு, மனிதன் போகமுடியாத, அந்த நெருங்கமுடியாததை. உங்கள் ஆத்மா மட்டுமே முனகுகிறது...

தாஸ்தாவ்ஸ்கி ஒருநாள் புதிராகச் சொன்னார் "அழகு உலகைக் காப்பாற்றும்". எந்த மாதிரிக் கூற்று இது? வெகு நாட்களுக்கு வெறும் வார்த்தைகளாகவே இதை நான் கருதி வந்தேன். அது எப்படி முடியும்? ரத்ததாகம் நிறைந்த சரித்திரத்தில் எப்போது, யாரை, எதிலிருந்து அழகு காப்பாற்றி இருக்கிறது? மேன்மையடையச் செய்திருக்கிறது: உயர்த்தியிருக்கிறது: சரி. ஆனால் யாரை அது காப்பாற்றியிருக்கிறது?
ஆயினும், அழகின் சாரத்தில் ஒரு குறிப்பிடத்தக்க தன்மை இருக்கிறது. குறிப்பிடத்தக்க தன்மை அதன் உன்னதத்தில் இருக்கிறது. ஒரு உண்மையான கலைப்படைப்பின் நம்பவைக்கும் தன்மை சற்றும் தகர்க்க முடியாதது. தன்னை எதிர்ப்பவரைக்கூடச் சரணடைய வைக்கிறது. புற அழகும், நாசூக்கும் கூடிய ஒரு அரசியல் பேச்சை, கடுமையான கட்டுரையை, ஒரு சமூகத் திட்டத்தை அல்லது தத்துவ அமைப்பை ஒரு தவறின் அடிப்படையிலோ, ஒரு பொய்யின் அடிப்படையிலோ உருவாக்கிவிட முடியும். கண்ணுக்குப் புலப்படாதது, திரிபு அடைந்திருப்பது வெளியே உடனே தெரிந்துவிடாது.
பிறகு இதை மறுக்க ஒரு பேச்சோ, கட்டுரையோ, திட்டமோ, மாறுபட்ட தத்துவமோ எதிர்ப்பாக எழுகிறது—அதேமாதிரி அழகுடனும், நாசூக்குடனும். மறுபடியும் அதே முறை. இதனால்தான் இப்படிப்பட்ட விஷயங்கள் நம்பப்பட்டும், நம்பப்படாமலும் இருக்கின்றன. இதயத்தைத் தொடாததைத் திரும்பத் திரும்ப வீணாகச் சொல்லிக்கொண்டு.
ஆனால் ஒரு கலைப்படைப்பு தன்னுள்ளேயே தன் நிர்ணயத்தன்மையைக் கொண்டிருக்கிறது. செயற்கையாக உருவாக்கப்பட்ட, அல்லது மிகைப்படுத்தப்பட்ட எண்ணங்கள் உருவங்களாக ஆவதைத் தாங்க முடிவதில்லை. அவை அனைத்தும் உடைந்து சிதறி விடுகின்றன. நலிவுற்று வெளிறிக் காணப்படுகின்றன. யாரையும் நம்ப வைப்பதில்லை. ஆனால் உண்மையை அள்ளிக்கொண்டு வந்து நம்முன் உயிரோட்டம் நிரம்பிய

சக்தியாகத் தரும் கலைப் படைப்புகள் நம்மை ஆட்கொள்கின்றன. வற் புறுத்துகின்றன. யாரும், எப்போதும், இனிமேல் வரப்போகும் காலங் களிலும் சரி, அவற்றைத் தகர்க்கத் தோன்றமாட்டார்கள்.
ஆகையால் ஒருவேளை அந்தப் பழம்பெரும் மும்மை அம்சங்கள், சத்தியம், நன்மை, அழகு, நம் இளமையின் தன்னம்பிக்கையில், பொருளா தாயப் பார்வையில் தோன்றினமாதிரி, வெறும் வெற்றுப் பேச்சல்ல? அல்லது மங்கிப்போன சூத்திரமல்ல? இம்மூன்று மரங்களின் உச்சிகளும் சந்தித்தால், சத்தியத்தின், நன்மையின், முரட்டுத்தனமான, துருத்திக் கொண்டிருக்கும் கிளைகள் நொறுங்கி, கீழே விழுந்து, மேலே எழும்ப முடியாதபடி ஆகும்போது, ஒருவேளை, அற்புதமான, தீர்மானிக்கமுடியாத, எதிர்பாராத அழகின் கிளைகள் முன்னே தள்ளிக்கொண்டு அந்த இடத்தை நோக்கியே எழும்பும். அப்படி ஆகும்போது அது மூன்றின் காரியங்களையும் நிறைவேற்றுமோ?
அப்படியானால் அழகு உலகைக் காப்பாற்றும் என்ற தாஸ்தாவ்ஸ்கியின் கூற்று, கவனமற்ற சொற்தொடரின்றி, ஒரு தீர்க்க தரிசனமோ? அற்புத அறிவு படைத்தவரான அவர் அவ்வளவு தூரம் பார்க்கத் தகுதி வாய்ந்தவர் தானே!
அப்படியானால் இலக்கியம் இன்றைய உலகுக்கு உதவி செய்ய உண்மை யிலேயே இயலுமா?
பல ஆண்டுகள் சிந்தனையின் விளைவாக இந்த விஷயத்தில் எனக்குக் கிடைத்த ஒரு சிறியதிருஷ்டி. அதை உங்களுக்கு முன்வைக்க முயலுகிறேன்.

ஏதோ ஒரு எழுத்தாளருக்கு வாழ்க்கையில் ஒரே ஒருமுறை கிடைக்கும் இந்த மேடை எனக்குக் கிடைக்க, தற்காலிக, தேவையின் பொருட்டு அமைத்துக்கொண்ட படிகள் மூன்றோ, நான்கோ அல்ல. பல நூறு, ஏன் பல ஆயிரப் படிகளை நான் ஏறி வந்திருக்கிறேன். அவை இணக்கமற்றவை, செங்குத்தானவை; உறைந்துபோனவை. மற்றவர்கள்— என்னைவிட வலுவானவர்களும், மேன்மையான திறமைபடைத்தவர்களும்— அழிந்து கொண்டிருக்கையில், நான் எப்படியோ உயிர்த்திருந்த இருட்டி லிருந்தும், குளிரிலிருந்தும் என்னை வெளியே இட்டுச் சென்றவை. அப்படி மடிந்தவர்களில் ஒரு சிலரைத்தான் நான் Archipelago of GULagன் * உடைபட்ட கணக்கற்ற தீவுத்திடல்களில் சந்தித்திருக்கிறேன். தொடர்ந்து நிகழும் கண்காணிப்பினூடே, சந்தேகமும், நம்பிக்கையின்மை யும் கூடிய சூழ்நிலையில் அவர்கள் அனைவருடன் நான் பேசினதில்லை. சிலரைப்பற்றிக் கேள்விப்பட்டதோடு சரி. மற்றவர்களைப்பற்றி வெறும்ஊகம் தான். அந்தப் பாதாளத்தில் விழுந்தவர்களில், ஏற்கனவே இலக்கிய கர்த்தாக்களென அறியப்பட்டவர்கள், வெளி உலகத்துக்குப் பரிச்சயமுற்ற வர்கள். ஆனால் மற்ற எத்தனைப்பேரை உலகம் அறியும்? எத்தனைப்பேர் ஒரு முறையாவது வெளியுலகத்துக்கு அறிமுகமானவர்கள்? சுத்தமாக ஒருவரால் கூட மீளமுடியவில்லை. ஒரு கல்லறையும் இன்றி மறதியில் வீசப்பட்டது மட்டுமல்ல, அரையில் துணிகூட இன்றி, நிர்வாணமாக, அவர்களுடைய நம்பர் குதிகாலில் இணைக்கப்பட்டு, ஒரு தேசத்தின் முழு இலக்கியமே அங்கு இருந்தது. ரஷ்ய இலக்கியம் அங்கே ஒருகணம்கூட இயக்கமின்றி நின்று விடவில்லை. ஆனால் வெளியிலிருந்து பார்க்க, அது ஒரு பாழ்நிலமாகத்தான் தோற்றமளித்தது. அமைதி நிரம்பிய ஒரு வனமே உருவாகியிருக்கக் கூடிய இடத்தில், எல்லா வெட்டிச் சாய்த்தலுக்கும்பின், ஏதேச்சையாக ஏதோ ஒரு சந்தர்ப்பவசத்தால் இரண்டு அல்லது மூன்று மரங்களே விடப் பட்டிருந்தன.
இன்று இங்கே இப்படி வீழ்ந்தவர்களின் நிழல்களின் துணையில், குனிந்த தலையுடன், முன்னே இங்கு வரத் தகுதி வாய்ந்தவர்களை அனு மதித்துவிட்டு, நான் நிற்கையில், அவர்கள் என்ன சொல்ல விரும்பியிருப் பார்கள் என்பதை என்னால் எப்படிக் கண்டு சொல்லமுடியும்?

---

* The Central Administration of Corrective Labour Camps.

இந்தக் கடன் நீண்ட நாட்களாக நம்மீது அழுத்தியிருக்கிறது. நாம் அதை அறிவோம். விளாடிமிர் ஸ்லோவேவின் வார்த்தைகளில்

“தளைகளால் பிணைக்கப்பட்டபோதும்
நாம் முடித்துவிடவேண்டும்
தெய்வங்கள் நமக்கு
அமைத்துத் தந்த வட்டத்தை.”

சிறைகளின் துன்பமான ஆவேசம் நிரம்பிய கும்பல்களில், கைதிகளின் தொடரில், சங்கிலியாய்த் தெரியும் ஹரிக்கேன் விளக்குகள் மாலை நேரக் காடுகளின் சோகத்தைக் கிழித்துக் கொண்டிருக்கையில் அடிக்கடி எங்களுள் வார்த்தைகள் நிரம்பி முழு உலகமுமே கேட்கும் வகையில் அவற்றைக் கதறவேண்டும் போலிருக்கும், எங்களில் ஒருவரையாவது முழு உலகமுமே கேட்க முடிந்திருந்தால். பிறகு எங்களுக்குத் தெளிவாகவே தெரிந்தது; வெற்றிகரமான எங்கள் தூதுவர்கள் என்ன சொல்வார்கள், உலகம் தன் அபிப்ராயத்துடன் எப்படிச் செவிசாய்க்கும் என்று. எங்கள் தொடுவானம் ஸ்தூல வஸ்துக்களையும், ஆன்மீக ஒட்டங்களையும் மிக தீர்க்கமாகவே அரவணைத்திருந்தது. துண்டிக்கப்படமுடியாத எங்கள் உலகில் அது எந்தவித ஏற்றத் தாழ்வையும் காணவில்லை. இந்த எண்ணங்கள் புத்தகங்களிலிருந்து எங்களுக்கு வரவில்லை. வெறும் ஒருங்கிணைப்பைக் கருதிக் கடன் வாங்கியவையும் அல்ல. இப்போது மடிந்துவிட்டிருக்கும் மனிதர்களுடன் சம்பாஷணையில் உருவானவை. சிறைகளில், காட்டுக் கணப்புத் தீயினருகில் தோன்றியவை. அந்த வாழ்க்கையின் பின்னணியில் ஆய்ந்தெடுத்தவை அவை. அந்த உலகத்திலிருந்து வளர்ந்தவை அவை.

கடைசியில் புறச் சக்திகள் சற்று பலவீனமடைந்த பிறகு, என்—எங்கள் தொடுவானம் விரிந்தது. போகப் போக, சிறிய துவாரம் எனினும் அதன் வழியே நாங்கள் “முழு உலகத்தையும்” கண்டு புரிந்து கொண்டோம். ஆச்சரியப்படத் தக்க வகையில் முழு உலகமும் நாங்கள் எதிர்பார்த்ததாகவே இல்லை. அதாவது, உலகம் “அதை நம்பிக் கொண்டு” வாழவில்லை. “அங்கே அழைத்துச் செல்லும்” உலகமாக இல்லை. கலங்கிய சதுப்பைக் கண்டு “என்ன அழகான குட்டை” என்று, கான்கிரீட் இணைப்பைக் கண்டு “என்ன அழகான நெக்லேஸ்” என்று சொல்லும் உலகம். ஆனால் மாறாக, சிலர் தேற்றமுடியாதபடி கண்ணீர் சொரிய, மற்றவர்கள் இலேசான மனதுடன் நடனம் செய்யும் உலகம்.

இது எப்படி நடக்க முடியும்? ஏன் இந்த அகண்ட இடைவெளி? நாங்கள் மரத்துப் போயிருந்தோமா? உலகம்தான் மரத்துப் போயிற்று? அல்லது, மொழியினால் ஏற்படுகிற வித்யாசங்களா? ஒருவர் மற்றவரின் தீர்க்கமான வார்த்தைகள் ஒவ்வொன்றையும் கேட்க முடியாதது ஏன்? வார்த்தைகள் சப்தமிடுவதை நிறுத்திவிட்டு, தண்ணீர் மாதிரி ஓடி விடுகின்றன, ருசி, நிறம், மணம் ஏதுமின்றி; அடையாளங்கூட இல்லாமல்.

இதை நான் புரிந்துகொண்ட அளவில், நான் நிகழ்த்த வந்த பேச்சின் தொனியும், உள்ளடக்கமும், அமைப்பும் காலத்தினடையே மாறிவிட்டிருக்கின்றன. இன்று நான் நிகழ்த்தும் உரை.

பனி உறைந்த சிறைவாச மாலைகளில் உருக்கொண்ட திட்டத்திற்கும், இந்த உரைக்கும் ஒற்றுமை சிறிதும் இல்லை.

நீலம் காலமாக, மனிதனுடைய பார்வை. ஹிப்னடிஸத்தினால் உருவாக்கப்படாததாக இருக்கும்வரை, அவன் ஊக்க சக்திகள், மதிப்பீடுகள், செயல்கள், நோக்கங்கள் எல்லாம் அவனுடைய வாழ்க்கை அனுபவங்களாலும், சமூகஅனுபவங்களாலும் தீர்மானிக்கப் படுவனவாக அமைந்திருக்கின்றன. ரஷியப் பழமொழி சொல்வதைப் போல், “உன் சகோதரனை நம்பாதே: உன் கோணல் கண்ணையே நம்பு”. அதுதான் நம்மைச் சுற்றியிருக்கும் உலகையும், மனித சுபாவத்தையும் புரிந்து கொள்ள பலமான அடிப்படை. பழைய காலத்தில் இந்த உலகம் மர்மமான தொன்றாகவும், வெறும் காடாகவும் பரந்து கிடந்தபோது, பொதுத் தொடர்புச் சாதனங்கள் ஆதிக்கம் செலுத்தத் தொடங்கும் முன்பு, தொடர்ந்து

துடிப்போடு ஒரு பிண்டமாக அது மாற்றமடையுமுன்பு, மனிதர்கள் அனுபவத்தை நம்பி, தங்களுடைய குறுகிய எல்லைக்குள், எவ்வித ஆபத்துமின்றி, குடியிருப்புகளுள், சமூகங்களுள், தேச எல்லைகளுக்குள் ஆண்டு வந்தார்கள். அந்த நேரத்தில், தனி நபர்கள் பொதுப்படையான மதிப்பீடுகளை உணர்ந்து ஏற்றுக் கொள்ள முடிந்தது. எது சாதாரணம், எது நம்பமுடியாதது என்று பிரிக்கமுடிந்தது. கொடுமை என்பது என்ன என்றும் வஞ்சகத்தின் எல்லைகளுக்கப்பால் என்ன இருக்கிறது என்பதையும்; எது நேர்மை, எது ஏமாற்று என்பதையும். இப்படிச் சிதறிக் கிடந்த மக்கள் முற்றிலும்வேறுபட்டவாழ்க்கையை நடத்தினலும். அவர்களின் நிறுவை, அளவு முறைகள் எப்படி வித்தியாசப் பட்டனவோ அவ்வாறே அவர்கள் மதிப்பீடுகள் குறிப்பிடத்தக்க விதத்தில் முரண்பட்டாலும், இவ் வேறுபாடுகள் எப்போதாவது வந்துபோன யாத்ரிகர்களுக்குத்தான் வியப்பாக இருந்தன. அவை அதிசயங்கள் என்ற பெயரில் குறிப்புகளில் சொல்லப்பட்டன. அப்போது இணைந்து விட்டிராத மனித குலத்திற்கும் இதனல் ஆபத்து இல்லை.

ஆனல் கடந்த சில பத்தாண்டுகளில், மிக நுணுக்கமான முறையில், புறக்கண்கள் அறியாவிதத்தில் மனித குலம் ஒன்று பட்டுவிட்டது—நம்பிக்கை தரக்கூடிய விதத்திலும், பயங்கரமானதாகவும். இதனல் ஒரு பகுதியில் நிகழும் தாக்குதல்களும், வீக்கங்களும், ஏறத்தாழ உடனேயே, தேவையான எதிர்ப்புச் சக்திகள் இல்லாத மற்ற பகுதிகளுக்கும் பரவிவிடுகின்றன. மனித குலம் ஒன்ருகி விட்டது: ஆனல் குடியிருப்புகளோ தேசங்களோ ஒன்ருக ஆனது போல் அல்ல: பல வருடங்கள் பரஸ்பர அனுபவத்தினல் இணையவில்லை. ஒரு பார்வையின் மூலமும் அல்ல, அதை வாஞ்சையுடன் கோணல் பார்வை என்ருலும். பொது மொழியின் வாயிலாகவும் இல்லை. ஆனல் எல்லாத் தடைகளையும் மீறி, அகில உலக ஒலிபரப்பு மூலமும், அச்சு மூலமும். நம் மேல் பனிமலையாய் நிகழ்ச்சிகள் இறங்குகின்றன. ஒரு நிமிடத்தில் பாதி உலகம் அதன் சிதறும் ஒலியைக் கேட்கிறது. ஆனல் இந் நிகழ்ச்சிகளைக் கணிக்கும் அளவுகோலை, உலகின் அவ்வளவு பரிச்சயமில்லாத பகுதிகளின் நெறிகளுடன் இவற்றை நிர்ணயிப்பதைச் செய்தித்தாள்கள் மூலமோ, ஒலி அலைகள் மூலமோ தெரிவிக்க முடியாது. தெரிவிக்கப் படுவதுமில்லை. ஏனெனில் இந்த அளவுகோல்கள் காலங்காலமாக அந்தந்த நாடுகளின், சமூகங்களின் விசேஷ நிலைமைகளினிடையில் முதிர்ச்சியடைந்து ஏற்றுக் கொள்ளப் பட்டவை. இவற்றைக் காற்றினூடே பரிமாறிக்கொள்ள முடியாது. உலகின் பல பகுதிகளில் மனிதர்கள் தாங்களே சிரமப்பட்டு நிர்மாணித்துக் கொண்டிருக்கும் மதிப்பீடுகளை நிகழ்வனவற்றிற்குப் பொருத்துகிருர்கள். அவர்கள் அடத்துடன், நம்பிக்கையுடன் தங்களுடைய மதிப்பீடுகளைக் கொண்டே — ஒரு போதும் மற்றவர்களின் மதிப்பீடுகளைக் கொண்டு அல்ல — நிர்ணயிக்கிருர்கள். உலகில் இப்படி வேறுபட்ட மதிப்பீட்டு அமைப்புகள் ஏராளம் இல்லாவிட்டாலும், பல இருக்கின்றன. கண்முன் நடக்கும் நிகழ்ச்சிகளைக் கணிக்க ஒன்று: கண்ணுக்கு மறைவில் தொலைவில் நடக்கும் நிகழ்ச்சிகளைக் கணிக்க மற்ருென்று: மூத்த சமுதாயங்கள் ஒன்றை, புதிய சமுதாயங்கள் மற்ருென்றைக் கொண்டிருக்கின்றன. தோல்வியுற்றவர்கள் ஒன்றையும், வெற்றிகரமானவர்கள் மற்ருென்றையும் பெற்றிருக்கிருர்கள். இப்படி மாறுபட்ட மதிப்பீட்டு முறைகள் அபஸ்வரமாகக் கூச்சலிடுகின்றன. கண்ணைப் பறிக்கின்றன. மயக்கம் தருகின்றன. துன்பத்தைத் தவிர்க்க, நாம் மற்றவற்றிலிருந்து ஏதோ சித்தஸ்வாதீனமின்மையில், பிரமையில் ஒதுங்கிப் போவது போல் ஒதுங்கி, உலகம் முழுவதையும் நம் மதிப்பீடுகளைக் கொண்டே கணிக்கிருேம். அதனல்தான் நாம் மகத்தான, அதிக துன்பம் தரக்கூடிய, தாங்க முடியாத பயங்கரங்களை-அவை உண்மையிலேயே மகத்தான, அதிக துன்பம் தரக்கூடிய அல்லது தாங்க முடியாதது என்பதினல் அல்ல—அவை நமக்கு அருகாமையில் இருக்கின்றன என்பதனல் ஏற்றுக் கொள்கிருேம். தொலைவில் இருக்கும் எதையும்—அதனுடைய முனகல்களுடன், அடக்கிய கூக்குரலுடன், அழிக்கப்பட்ட உயிர்களுடன், அதில் பல மில்லியன் உயிர்கள் சம்பந்தப்பட்டிருப்பினும், நம் வீட்டை ஆக்கிரமித்துக் கொள்ள பயமுறுத்தாதவரை மிகவும் பொறுத்துக் கொள்ளக் கூடியதாகவும், சகித்துக் கொள்ளக் கூடியதாகவும் நாம் கருதுகிருேம்.

உலகின் ஒரு பகுதியில், வெகு காலத்திற்கு முன்பு அல்ல, புராதன ரோமானியர்களின் கொடுமைகளுக்குச் சற்றும் குறையாத ஒன்றில் பல நூறுயிரக்கணக்கான கிறிஸ்துவர்கள் கடவுளில் தங்களுக்கு இருந்த நம்பிக்கைக்காகத் தங்கள் உயிர்களைக் கொடுத்தார்கள். மற்ற கோளார்த்தத்தில் ஒரு பைத்தியக்காரன் (அவன் நிச்சயம் தனியன் அல்ல) சமுத்திரத்தைக் கடந்து, நம்மை மதத்திலிருந்து காப்பாற்ற, மதகுருவின் மேல் கத்தியைப் பாய்ச்ச விரைகிறான். நம் ஒவ்வொருவருக்காகவும் அவன் தன் மதிப்பீடு கொண்டு கணக்கிட்டு விட்டான்.

ஒரு மதிப்பீட்டு அமைப்பின்படி பொறுமைப் படத்தக்கதும், செழுமையான சுதந்திரமாகவும் காணப்படும் தொலைவிலிருக்கும் ஒன்று, இன்னொரு மதிப்பீட்டின்படி பஸ்களைக் கவிழ்த்து எரியச் செய்யும் வகையில் உணரப்படுகிறது. உலகின் ஒரு பகுதியில் நம்ப முடியாத முன்னேற்றத்தை, செழுமையைக் குறிக்கும் கனவாய் இருக்கும் ஒன்று, இன்னொரு பகுதியில் உடனடி நடவடிக்கை கோரும் பயங்கரச் சுரண்டலின் சலிப்பான விளைவாய் இருக்கும். இயற்கையின் நாசங்களுக்குப் பல மாறுபடும் மதிப்பீடுகள் இருக்கின்றன. இரண்டு லட்சம் உயிர்களை விழுங்கிய வெள்ளம் உள்ளூர் விபத்தைவிடக் குறைந்த முக்கியத்துவம் பெற்றிருப்பது போல் தெரிகிறது. தனி நபர் அவமரியாதைக்கு மாறுபட்ட மதிப்பீடுகள் உண்டு. சில நேரங்களில் ஒரு கேலிப் புன்னகையோ அல்லது அலட்சியமான சைகையோ அவமானகரமாக இருக்கிறது. மற்ற வேளைகளிலோ கொடுமையான வாட்டி உதைத்தல் துரதிருஷ்டவசமாக நிகழ்ந்த விளையாட்டைப்போல் மன்னிக்கப்பட்டு விடுகிறது. தண்டனைக்கும், வஞ்சகத்திற்கும் பல பல மதிப்பீடுகள் உண்டு. ஒரு மதிப்பீட்டின்படி, ஒரு மாத சிறைத் தண்டனை, கண்காணு இடத்தில் சிறைவாசம், பாலும், ரொட்டியும் மட்டுமே கிடைக்கும் தனிக்கப்பட்ட சிறைவாசம் கற்பனையைத் தகர்த்து, செய்தித்தாள்களைச் சினத்தால் நிரப்புகிறது. மற்றொன்றின்படியோ, சுவர்களெல்லாம ஐஸ்கட்டியினுல் மூடப்பட்டும், அரைத் துணிவரை கைதிகள் நிர்வாணிக்கப்படும் தனிச் சிறைத் தண்டனையும், இருபத்தி ஐந்து வருடச் சிறைத் தண்டனையும், ஸ்வாதீனமுள்ளவர்களுக்கான மனநோய் விடுதிகளும், ஏதோ காரணத்திற்காகத் தப்பித்து ஓடி, எல்லைக் கோட்டில் சுடப்பட்டு இறக்கும் கணக்கற்றவர்களும் சாதாரணமான, ஏற்றுக் கொள்ளப்படும் விஷயங்கள். ஆனுல், உண்மையில் நாம் ஒன்றும் அறியாத, நமக்குத் தகவல்கள்கூட எட்டாத, எப்போதோ தொடர்புகொள்வோரின் காலாவதியாகிவிட்ட சில்லறை ஊகங்களை மட்டுமே வைத்து, நம் மனம் அந்த விநோதப் பிரதேசத்தைப்பற்றி அமைதி கொண்டிருக்கிறது.

இருந்தாலும், மனிதப் பார்வையின் இந்த இரட்டைத் தன்மையை, மற்றவனுடைய துயரத்தைப் புரிந்துகொள்ளாத ஊமைத்தனத்தை நாம் கோபிக்கமுடியாது. மனிதன் இப்படித்தான் உருவாக்கப் பட்டிருக்கிறான். ஆனுல் ஒரே கூருகச் சேர்த்துப் பிணைக்கப்பட்டிருக்கும் மனித குலம் முழுமைக்கும் இப்படிப்பட்ட பரஸ்பரப் புரிந்துகொள்ளாமை, தவிர்க்கமுடியாத, கோர அழிவை முன் வைக்கிறது. ஒரு உலகம், ஒரு மனிதகுலம், ஆறு, நான்கு, ஏன் இரண்டு மதிப்பீடுகளைக் கொண்டு கூட வாழ முடியாது. நாம் இந்த இயைவு முரண்பாட்டினுல், இயக்க முரண்பாட்டினுல் கிழிக்கப் பட்டு விடுவோம்.

இரண்டு இதயங்கள் கொண்ட மனிதன் இந்த உலகத்திற்கானவன் இல்லை. நாமும் அவனுடன் சேர்ந்து இந்த ஒரு பூமியில் வாழ முடியாது.

ஆனுல், யார் இந்த மதிப்பீட்டு அமைப்புகளை ஒருங்கிணைப்பது? எப்படி? இன்று வேறுபடுத்திக் காட்டப்படும் நன்மை, தீமை, சகிக்கக் கூடியவை. சகிக்க முடியாதவை, இவை அனைத்துக்கும் பொருந்தும் அர்த்தத்தை யார் மனித குலத்திற்கு உருவாக்க முடியும்? எது உண்மையில் சுமையானது, எது நம்மால் சுமக்க முடியாதது, எது கொஞ்சம் சதையைக் கொறிக்கிறது என்பதை யார் விளக்குவது? அருகில் இருப்பதன் மீதல்ல, மிகுந்த பயங்கரமானதின்மீது

யார் சினத்தை செலுத்துவது? மனித அனுபவததிற்கு மீறிய இந்தத் தெளிவை யார் தரமுடியும்?
அடத்துடன் கூடிய குருட்டுத்தனவாதியிடம் மற்றவர்களின் அபூர்வமான மகிழ்ச்சியைப் பற்றி, துக்கத்தைப் பற்றி, அவனே ஒருபோதும் உணர்ந்திராத தெளிவின் பரிமாணங்களைப் பற்றி, தோற்றங்களைப் பற்றி யார் எடுத்துக்கூற முடியும்? பிரசாரம், கட்டுப்பாடு, விஞ்ஞானபூர்வமான நிருபணம், எல்லாமே பயனற்றவை. ஆனால் அதிருஷ்டவசமாக இந்த உலகில் ஒரு சாதனம் இருக்கத்தான் செய்கிறது. அதுதான் கலை, அதுதான் இலக்கியம். அவை ஒரு அற்புதத்தையே நிகழ்த்த முடியும். மற்றவர்களின் அனுபவங்கள் வீணாகி, தன்னுடைய சொந்த அனுபவம் ஒன்றின் மூலமே தெரிந்துகொள்ளுதலின் குறைபாடுகளை அவை மீறமுடியும். ஒவ்வொரு மனிதனிடமிருந்தும், அவனுடைய குறுகிய வாழ்க்கை முடிந்தவுடன், ஒரு பரிச்சயமற்ற, முழு வாழ்நாளின் அனுபவத்தை அதன் சுமையுடனும், வண்ணங்களுடனும், வாழ்க்கையின் ஆதாரச் சத்துடனும் முழுமையாகக் கலை மற்றவர்களுக்குத் தருகிறது. உடலில் இனந்தெரியாத ஒரு அனுபவத்தை மறுபடியும் உருவாக்கி, அதை நம் அனுபவமாக நாம் பெற்றுக் கொள்ளச் செய்கிறது.
அதற்கும் மேல்: நாடுகளும், கண்டங்களும் நூற்றுண்டுகளுக்குப் பிறகும் ஒன்றின் தவறை மற்றொன்று திரும்பவும் செய்கின்றன. பின், இந்த அனுபவங்கள் எல்லோர்க்கும் தெரிந்துதானே இருக்கும் என்று நினைக்கலாம். ஆனால் அப்படி இல்லை. சில நாடுகள் ஏற்கனவே அனுபவித்ததை, ஆராய்ந்ததை, ஒதுக்கியதை மற்றவை திடீரென்று நவீனமானதாகக் கண்டு கொள்கின்றன. இங்கேயும், நமக்கு நம் வாழ்க்கையில் கிடைத்திராத அனுபவத்திற்குப் பிரதி கலைதான். இலக்கியம்தான். அவற்றிற்கு அற்புதமான சக்தி உண்டு. மொழி, பழக்க வழக்கங்கள், சமூக அமைப்பு ஆகிய வேறுபாடுகளுக்கும் அப்பால் ஒரு நாட்டின் அனுபவம் முழுவதையும் இன்னொன்றிற்குத் தெரிவிக்க முடியும். அனுபவமற்ற நாட்டிற்கு, இன்னொரு நாட்டில் கடுமையான பல பத்து வருடங்கள் தொடர்ந்து நிகழ்ந்த அனுபவத்தைச் சொல்ல முடியும். அதிகபட்சம், அழிவுப் பாதையில் செல்லும், அல்லது தவறான, தேவையற்ற போக்கிலிருந்து தவிர்த்து, அதன்மூலம் மனித சரித்திரத்தின் குருட்டுத்தனமான அலைக்கழிச்சலைத் தவிர்க்க முடியும். கலையின் இந்த மகத்தான, மேன்மையான குணத்தைத்தான் இன்று இந்த நோபல் மேடையிலிருந்து உங்களுக்கு வலுவாக நினைவூட்டுகிறேன்.
இலக்கியம் சத்தியமான அனுபவத்தின் சாரத்தை இன்னொரு வகையிலும் தெரிவிக்கிறது; ஒரு தலை முறையிடமிருந்து இன்னொரு தலைமுறைக்கு. இந்த விதத்தில் அது ஒரு தேசத்தின் வாழும் நினைவு ஆகிவிடுகிறது. இந்த விதத்தில் தன்னுள்ளேயே தன் கடந்த காலச் சரித்திரத்தின் பிழம்பை, பாதுகாப்பான முறையில் ஹீனமடைந்துவிடாத, கேவலப்படுத்திவிடாத உருவில் வைத்துத் தூண்டுகிறது. இலக்கியம், இப்படி, மொழியுடன் ஒரு தேசத்தின் ஆத்மாவைக் காப்பாற்றுகிறது.
(சமீப காலத்தில், தேசங்களைச் சமன் படுத்துவது பற்றி, பல்வேறு இனங்கள் தற்கால நாகரிகம் என்ற கொதிசட்டியில் மறைந்துவிடுவதைப் பற்றிப் பேசுவது நாகரிகமாக இருக்கிறது. ஆனால் இந்தக் கருத்துடன் நான் உடன்படவில்லை. இந்தத் தர்க்கம் வேறுவிஷயம். பல்வேறு தேசங்களின் மறைவு, எல்லா மனிதர்களும் ஒரே மாதிரி மாறி, ஒரு வீச்சு, ஒரு முகம் என்று ஆகிவிடுவதைப் போன்ற வரட்சியை நம்மிடையே உண்டாக்கியிருக்கும் என்று குறிப்பிடுவதே பொருத்தமானது. தேசங்கள்தான் மனித குலத்தின் சொத்து. அதன் ஒருமித்த வீச்சு. அதில் மிகச் சிறியது, முக்கியத்துவமில்லாததுகூட அதற்கென்றேயிருக்கும் விசேஷச் சின்னங்களை, புனித நோக்கின் மிகச் சிறப்பான வெளிப்பாட்டைத் தன்னுள் கொண்டிருக்கும்.)
எந்த நாட்டின் இலக்கியம் அதிகாரத்தின் குறுக்கீடலால் அமைதி இழக்கிறதோ, அந்த நாடு துன்பத்தைத்தான் பெறும். ஏனென்றால், இது வெறும் 'அச்சு சுதந்திரத்தை' மீறுவது மட்டுமல்ல: தேசத்தின் இதயத்தையே நிறுத்திவிடுவதாகும். அதனுடைய நினைவைத் துண்டு துண்டாய்க் கிழிப்பதாகும். அந்தத் தேசம் தன்னைக் கவனிக்க மறந்துவிடுகிறது.

ஆன்மீக ஒருமைப்பாட்டை இழந்துவிடுகிறது. பொது மொழி என்று கருதப்படுவதையும் மீறி, ஒரே தேசத்தவர் ஒருவர் மற்றொருவரைத் திடீரென்று புரிந்து கொள்ள முடியாமற் போய்விடுகிறது. ஊமைத் தலைமுறைகள் தங்களைப்பற்றித் தங்களிடையேயோ, அன்றி அடுத்த தலைமுறையினரிடமோ பேசக்கூட இல்லாமல் வளர்ந்து மூப்படைந்து இறந்து விடுகின்றன. அக்மடோவா, ஜாம்ஜாடின் போன்றவர்கள்—உயிருடனேயே வாழ்க்கை முழுதும் புதைக்கப்பட்டு — இறக்கும்வரை நிசப்தத்திலேயே, அவர்கள் எழுதிய வார்த்தைகளின் எதிரொலியை ஒருபோதும் கேட்க முடியாமல் படைக்க வேண்டும் என்று விதிக்கப்படும்போது, அது அவர்களுடைய இழப்பு மட்டுமல்ல, தேசம் முழுமைக்குமே ஆபத்தானது. இன்னும் சிலவற்றில் மேலும் —இம்மாதிரியான ஊமைத்தனத்தின் விளைவாகச் சரித்திரம் முழுதுமே சற்றும் தெரிந்து கொள்ள முடியாதபடி ஆகும்போது—மனித குலத்திற்கே ஆபத்து.

பல கால கட்டங்களில், பல நாடுகளில், கலையையும், கலைஞனைப் பற்றியும் கோபமான, காரசாரமான, நுணுக்கமான விவாதங்கள் எழுந்திருக்கின்றன. கலையும் கலைஞனும் தங்களுக்காகவே வாழச் சுதந்திரம் பெற்றவர்களா அல்லது அவர்கள் சமூகத்திற்கு, பாரபட்சமின்றி, எப்போதும் அதற்குத் தங்கள் கடமையைக் கருத்தில் கொண்டு செயலாற்ற வேண்டுமா? எனக்கு இதில் சங்கடம் ஏதும் இல்லை. ஆனால் அந்த விவாதங்களை மறுபடியும் நான் எழுப்பமாட்டேன். இந்த விஷயத்தைப் பற்றிய மிகச்சிறப்பான உரைகளில் ஆல்பர்ட் காமுவின் நோபல் உரை ஒன்று. அதனுடைய முடிவுகளுடன் தயக்கமின்றி எனக்கு உடன்பாடே. ரஷ்ய இலக்கியம் உண்மையில், பல பத்தாண்டுகளுக்கு, தன்னைப் பற்றிய தியானத்தில் தன்னை இழந்துவிடாத, சிறுபிள்ளைத்தனமாகப் பறக்கடித்துக் கொண்டிராத ஒரு இயல்பை வெளிப்படுத்திக் கொண்டிருந்து இருக்கிறது. இந்தப் பாரம்பர்யத்தை என்னால் முடிந்தவரை நான் தொடர்வதில் எனக்கு வெட்கம் ஏதுமில்லை. எழுத்தாளன் தன் சமுதாயத்திலேயே ஆக்கபூர்வமாகச் செயல்படமுடியும், அப்படிச் செயல்படுவது அவன் கடமை என்ற கருத்துக்களுடன் ரஷ்ய இலக்கியத்திற்கு நீண்ட நாட்களாகப் பரிச்சயம் உண்டு.

வெளி உலகில் என்ன நடக்கிறது என்பதைப் பொருட்படுத்தாமல் தன் அனுபவங்களையும், உட்பார்வைகளையுமே எடுத்துச் சொல்லும் கலைஞனின் உரிமையை நாம் மீற வேண்டாம். கலைஞனைத் தட்டிக் கேட்க வேண்டாம். ஆனால்—கெஞ்சி, கோபித்து, வற்புறுத்தி, ஆசைகாட்டி—அப்படிச் செய்ய நமக்கு அனுமதி வேண்டும் என்போம். தன் திறமையை ஓரளவுக்குத்தான் அவன் வளர்த்துக் கொள்கிறான். அதன் பெரும் பகுதி அவன் பிறப்பிலேயே அவனுள் இருந்து விட்டது. இந்தத் திறமை என்ற பரிசு அவனுடைய சுய இச்சைமீது பொறுப்பைச் சுமத்துகிறது. கலைஞன் யாருக்கும் எதற்காகவும் கடமைப்பட்டவனல்ல என்று கொள்வோம். இருப்பினும் அவனே நிர்மாணித்துக் கொண்ட உலகங்களுள், தன்னிலை உணர்வுகளுள் ஆழ்ந்துவிடுவதன் மூலம் எவ்வாறு அவனால் பிரத்யட்சமான உலகை வியாபார மனப்பாங்குடையவர்களிடம் ஒப்படைத்துவிட முடிகிறது என்பதைக் காணும் போது மிகத் துன்பமாக இருக்கிறது.

நாம் வாழும் இந்த இருபதாம் நூற்றாண்டு முந்தைய நூற்றாண்டுகளைவிடக் கொடுமையானதாகிவிட்டது. முதல் ஐம்பது வருடங்கள் அதன் எல்லாப் பயங்கரங்களையும் அழித்து விடவில்லை. வர்க்கப் போராட்டம், இனப்பூசல், பாமரர்களின் போராட்டம், தொழிற்சங்கத் தகராறு என்று காலப்போக்கில் மரியாதைக்குரிய சொற்களாக மாறிவிட்ட பேராசை, பொறாமை, கட்டுப்பாடின்மை, பரஸ்பர துவேஷம் முதலிய குகைக்கால உணர்ச்சிகளால் நம் உலகம் கிழிக்கப்படுகிறது. சமரசத்தை ஏற்காத கற்காலத் தன்மையான மறுப்பு வெறும் விதிமுறையாக மாறிப் பழமையின் நற்பண்பாகக் கருதப்படுகிறது. தொடர்ந்து நிகழும் உள்நாட்டுப் போர்களில் பல மில்லியன் இழப்புக்களைச் செய்ய வைக்கிறது. மாற்றம் இல்லாத,'எல்லா இடங்களுக்கும் காலங்களுக்கும் பொருந்தும் நன்மை, தீமை என்று ஏதும் இல்லை; அவை எல்லாம் நிலையில்லாமல் ஏற்றத் தாழ்வுகளுடன் கூடியவை என்று நம்முள்

பறையடிக்கிறது. அதனால் உன் கட்சிக்கு எது லாபகரமானதோ அதையே அப்போதும் செய் என்பதுதான் நியதி. சந்தர்ப்பவாதிகள் தங்களுக்குத் தகுந்த வாய்ப்பில், அது அவர்களாகத் தேடிப் பெற்றதாக இல்லாவிட்டாலும், அனாவசியமானதாக இருந்தாலும், உலகமே அதனால் உருண்டு கீழே விழுந்தாலும், ஒரு கைக்கொள்ளலைக் கைவிட்டு விடுகிறார்கள். வெளியிலிருந்து பார்க்கும்போது மேற்கத்திய சமூகத்தில் நிலவும் கொந்தளிப்பின் அளவு, ஒரு சமுதாயம் கவிழ்ந்து விடும் ஒரு கட்டத்தை நெருங்கிக் கொண்டிருக்கிறது. பல நூற்றாண்டுகளாக இருந்த ஒழுங்கின் கட்டுப்பாடு தளர்ந்து, வன்முறை வெட்கமின்றி, வெற்றிகரமாக, அதன் மலட்டுத் தன்மை பலமுறை சரித்திரத்தில் ஸ்தாபிக்கப்பட்டு நிருபணம் செய்யப்பட்டபோதும் கவலையின்றி உலகெங்கும் நடைபோடுகிறது. அதற்கும் மேலாக, எல்லா இடங்களிலும் இந்தக் குரூரமான ஆதிக்கம் நிலவியிருப்பது மட்டுமல்ல, அதைக் குதூகலத்துடன் நியாயப்படுத்துவதும் நடக்கிறது. அதிகாரம் எதையும் செய்ய முடியும். தர்மம் ஒன்றும் செய்ய இயலாது என்ற அநாகரிகமான கொள்கையால் உலகம் முழுவதும் மூழ்கடிக்கப்படுகிறது. தாஸ்தாவ்ஸ்கியின் பேய்கள்—வெறும் ஒரு பிராந்தியக் கனவு மருட்சியாகக் கடந்த நூற்றாண்டில் இருந்தது,—அவற்றைப் பற்றிக் கனவுகூடக் கண்டிருக்க முடியாத நாடுகளை நம் கண் முன்னேயே பீடித்து உலகம் எங்கும் பரவுகிறது. வழிப்பறி, கடத்தல், தீ, குண்டெறிதல் இவற்றின் மூலம் நாகரிகத்தை உலுக்கி அழித்துவிடத் தங்கள் தீர்மானத்தை அறிவித்துவிட்டன. ஒருவேளை அவை வெற்றி பெறக்கூடும். உடலின்பத்தைத் தவிர வேறெந்த அனுபவங்களையும் பெறாத இளைஞர்கள், இவற்றிற்குப் பின்னால் காலத்தின் வழியே கிடைக்கும், சொந்தத் துன்பங்களையும், புரிந்துகொள்ளலையும் பெற்றிராமல், பத்தொன்பதாம் நூற்றாண்டின் சிறுமை நிறைந்த ரஷ்யாவின் தவறுகளை ஏதோ புதிதானதைக் கண்டு பிடிக்கும் உணர்வில் மகிழ்ச்சியுடன் திரும்பவும் செய்கிறார்கள். சீனச் செங்காவலரின் சமீப காலத்தியச் சிறுமையைச் சிறந்த உதாரணம் எனக் கொண்டாடுகிறார்கள். மனிதகுலத்தின் பழம்பெரும் சாரத்தைச் சற்றும் புரிந்து கொள்ளாமல் அனுபவமற்ற, அப்பாவித்தனமான நம்பிக்கையுடன் அவர்கள் கூக்குரலிடுகிறார்கள்: அந்தக் கொடுமை நிறைந்த, பேராசை பிடித்த அடக்குமுறையாளர்களை, விரட்டி அடிப்போம். கைக் குண்டுகளையும், துப்பாக்கிகளையும் ஒதுக்கிவைத்த பின் புதிய தலைமுறையினர் (நாம்!) நியாயமான உணர்வுடனும், பரிவுடனும் இருப்பார்கள். அப்படி இல்லவே இல்லை. ஆனால் நம்மிடையே சில ஆண்டுகள் கூடுதலாக வாழ்ந்தவர்கள், புரிந்து கொண்டவர்கள், இந்த இளையவர்களை எதிர்க்க முடிந்தவர்கள்—பலர் எதிர்க்கத் துணிவதில்லை—அவர்கள் 'பழமை வாதிகளாகக்' காட்சி அளிக்காமல் இருக்க எதையும் ஒப்புக்கொண்டு விடுகிறார்கள். பத்தொன்பதாவது நூற்றாண்டின் மற்றொரு அம்சத்தைக் குறித்து தாஸ்தாவ்ஸ்கி கூறியதுபோல் "முன்னேற்றக் கருத்து என்ற கோணங்கித் தனத்திற்கு அடிமைத்தனம்".

மூனிக் ஆவேசம் கடந்தகால நிகழ்ச்சியாய் எந்த விதத்திலும் மறைந்துவிடவில்லை. அது ஒரு சிறிய நிகழ்ச்சியாக இருந்துவிடவில்லை. இருபதாவது நூற்றாண்டிலும் மூனிக் உணர்வு நிலவுகிறது என்று சொல்ல நான் துணிவேன். திடீரெனப் பற்களைக் காட்டி மீண்டெழும் அநாகரிகத்தின் எதிர்பாராத் தாக்குதலை எதிர்க்க, பயந்த சுபாவமுடைய நாகரிக உலகிற்குச் சலுகைகளையும், புன்னகைகளையும் தவிர வேறு ஒன்றும் கிடைக்கவில்லை. மூனிக் ஆவேசம் வெற்றிகரமான மக்களின் மனத்திண்மையைப் பீடித்திருக்கும் நோய். எந்த விலை கொடுத்தாவது பொருளாதார முன்னேற்றத்தை அடைந்துவிடவேண்டுமென்ற தாகத்தில் தங்களை இழந்துவிட்டவர்களின் அன்றாட நிலை. அப்படிப்பட்ட மனிதர்கள்—அவர்கள் இன்றைய உலகில் பலர் இருக்கிறார்கள் — செயலின்மையைத் தேர்ந்தெடுத்துவிட்டுப் பின்வாங்கிவிடுகிறார்கள். அவர்களுக்குப் பழகிவிட்ட வாழ்க்கை இன்னும் கொஞ்சம் இழுத்துக் கொண்டு நீடிக்க: இன்று துன்பங்கள் என்ற வாயிற்படியினுள் நுழைந்துவிடாதிருக்க. நாளை எல்லாம் சரியாகிவிடும் பாருங்கள். (ஆனால் ஒன்றும் அப்படிச் சரியாகிவிடாது. கோழைத்தனத்திற்கு விலை கேடுதான். நாம் தியாகங்களைச் செய்யத் துணிந்தால்தான் அச்சமின்மையையும் வெற்றியையும் பெறுவோம்.)

இதற்கும் மேல், ஒன்ருகப் பிணைக்கப்பட்டுவிட்ட புற உலகம் ஆன்மீகமாகக் கலந்துவிட அனுமதிக்கப்படுவதில்லை என்ற உண்மையினல் அழிவு நம்மைப் பயமுறுத்துகிறது. அறிவின், அனுதாபத்தின் அணுக்கள் ஒரு பாதியிலிருந்து இன்னெரு பாதிக்குத் தாவிவிட அனுமதிக்கப்படுவதில்லை. இது உலகின் பல பகுதிகளிடையே தகவல் ஒடுக்கப்படுதல் என்ற கட்டுப் படுத்த முடியாத அபாயத்தை நம் முன் வைக்கிறது. தகவல் ஒடுக்கப் படுதல் செயலிழப்பிற்கும், அழிவிற்கும் இட்டுச் செல்கிறது என்பதைத் தற் கால விஞ்ஞானம் அறியும். தகவல் ஒடுக்கப்படுதல் நாடுகளிடையே அவற் றின் அடையாளங்களையும். ஒப்பந்தங்களையும் பிரமையாக்கி விடுகிறது. அடக்கப்பட்ட ஒரு பிரதேசத்திற்குள் எந்த ஒப்பந்தத்தை திரிப்பதும்—அதைவிடச் சுலபமாக—அது எப்போதும் இருந்திராததைப் போல் மறந்து விடுவதும் எளிதானது. (ஆர்வெல் இதை மிகத் தெளிவாகவே புரிந்து கொண்டிருந்தார்.) மனிதர்கள் இல்லாமல், செவ்வாய்க் கிரகத்திலிருந்து வந்த ஆராய்ச்சிக் குழுவினர் வந்திருப்பது, வாழ்வது போன்றது அடக்கப் பட்ட பிரதேசம். உலகின் மற்ற பகுதியைப் பற்றி ஒன்றும் சரியாக அறியா தவர்களாக, அதை 'விடுதலை செய்ய' வந்தவர்கள் தாம் என்ற புனித நம்பிக் கையில் அதை மிதித்துத் துவைத்து விடத் தயாராக இருப்பவர்கள்.

கால் நூற்றுண்டுக்கு முன் மனித இனத்தின் சிறந்த நம்பிக்கையாக ஐக்கிய நாடுகள் ஸ்தாபனம் பிறந்தது. துரதிருஷ்டவசமாக, ஒழுங்கீனமான உலகில் அதுவும் ஒழுங்கீனமானதாக வளர்ந்துவிட்டது. அது ஐக்கியநாடுகள் ஸ்தாப னம் அல்ல: ஐக்கிய அரசாங்கங்களின் ஸ்தாபனம். அங்கு எல்லா அரசாங் கங்களும் சமம்: மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டவையும், மக்கள்மீது திணிக் கப்பட்டவையும், அதிகாரத்தை ஆயுதங்கள்மூலம்கைப்பற்றியவையும், பெரும் பான்மையின் கூலிப்படைத்தனமான பாரபட்சத்தை நம்பி ஐ. நா. சில நாடு களின் சுதந்திரத்தைக் கவனமாகப் பாதுகாக்கிறது. சில நாடுகளின் சுதந்தி ரத்தைப் புறக்கணிக்கிறது. வோட்டெடுப்பைப் பணிவுடன் ஏற்றுக்கொண்டு, தனிப்பட்ட நபர்களின் வேண்டுகோளை—எளிய மக்களின் முனகல்கள், கெஞ்சல்கள்—இந்த எளிய மக்கள் அவ்வளவு பெரிய ஸ்தாபனத்தின் கண் களில் முக்கியமாகப் படாததால், ஏற்று அவர்கள் துன்பங்களை விசாரணை செய்ய மறுத்தது. இருபத்தைந்து வருடங்களில் ஐ. நா.வின் மிகச் சிறப் பான தஸ்தாவேஜான மனித உரிமைப் பிரகடனத்தை உறுப்பினராவதற்கு ஒரு கட்டாய நிபந்தனையாக அரசாங்கங்களின் முன் வைக்க எந்த முயற்சி யையும் மேற்கொள்ளவில்லை. இதன் மூலம் எளிய மக்களை அவர்கள் தேர்ந் தெடுத்திராத அரசாங்கங்களின் இச்சையினுள் திணித்து அவர்களுக்குத் துரோகம் செய்துவிட்டது.

தற்கால உலகின் தோற்றம் விஞ்ஞானிகளின் கைகளில் மட்டும் இருப்ப தாகவே தோன்றும். மனித இனத்தின் பொறியியல் நடவடிக்கைகள் அனைத்தும் அவர்களால் தீர்மானிக்கப்படுகின்றன. உலகம் செல்லும் திசை விஞ்ஞானிகளின் நல்லெண்ணத்தை மட்டுமே, அரசியல்வாதிகளின் நல்லெண்ணத்தை அல்ல, பொறுத்திருக்கிறது என்று தோன்றும். விஞ் ஞானிகள் ஒன்று சேர்ந்து ஈடுபட்டால் எவ்வளவு காரியங்கள் சாத்திய மாகின்றன என்பதைச் சில உதாரணங்கள் காட்டியிருக்கின்றன. ஆனல் அப்படி இல்லை. மனித குலத்தின் முக்கியமான, சுயேச்சையாகத் துடிப் போடு இயங்கும் ஒரு சக்தியாகத் தங்களை மாற்றிக் கொள்ள எந்த முயற்சி யையும் அவர்கள் செய்யவில்லை. மற்றவர்களின் துன்பங்கள் தங்கள் பொறுப்பல்ல என்று சொல்வதிலேயே தங்களுடைய மாநாடுகளை அவர்கள் செலவிடுகிருர்கள். விஞ்ஞானத்தின் சுவர்களுக்குள்ளேயே பாதுகாப்பாக இருப்போம். மூனிக்கைப் பற்றிய அதே உணர்வு பலவீனமூட்டும் தன் சிறகுகளை அவர்கள்மீது விரித்துவிட்டது.

இந்தக் கொடுமையான சக்திவாய்ந்த, அழிவின் ஓரத்தில் பிளவுபட்டு நிற்கும் இந்த உலகத்தில் எழுத்தாளனுடைய இடம், பங்கு பின் என்ன? கேவலம், ராக்கட்டுகள் விடப்படுவதற்கும் நமக்கும் ஒரு சம்பந்தமுமில்லை: மிகச் சாதா ரணமான கைவண்டியைக்கூட நாம் தள்ளுவதில்லை; பொருளாதாரச்சக்தியை மட்டுமே மதிப்பவர்களால் நாம் அலட்சியப் படுத்தப்படுகிறேம். அப்போது பின்வாங்கி, நன்மையின் நிலையான தன்மையில், உண்மையின் பிளவுபடாத தன்மையில் நம்பிக்கை இழந்து, வெறுமே ஒதுங்கி நின்று, கசப்பான நம்

பார்வைகளை மட்டுமே—மனித இனம் இப்படி நம்பிக்கைக்கு அப்பால் சிறுமையடைந்துவிட்டது என்பதை, இருக்கும் ஒரு சில தூய்மையான ஆத்மாக்கள் இவர்களிடையே வாழ்வது மிகக் கடினம் என்பதை—உலகுக்குத் தர முயல்வது இயற்கைதானே!

ஆனால் இப்படித் தப்பித்துக் கொள்ளவும் முடியாது. சொல் என்பதை யார் தன் கைக்குள் எடுத்துக் கொண்டு விட்டானோ அவன் அதிலிருந்து தப்பிக்கவே முடியாது. சக மனிதர்களிடமிருந்து விடுபட்ட நீதிபதியல்ல எழுத்தாளன். அவன் நாடு, அவன் சக மனிதர்கள் செய்யும் ஒவ்வொரு குற்றத்திற்கும் அவன் உடந்தையாகிறான். அவனுடைய தந்தை நாடு அந்நிய தேசத்துத் தலைநகரின் வீதிகளை ரத்தத்தால் நிரப்பினால் அந்தச் செம்புள்ளிகள் எழுத்தாளனின் முகத்தில் நிலையாக வீசப்படுகின்றன. மரணகரமான இரவில் அவனை நம்பிய நண்பனைத் தூக்கத்தினிடையே மூச்சுத் திணற நெரித்தால், எழுத்தாளனின் கைகள் அந்தக் கயிற்றினால் ஏற்பட்டச் சிராய்ப்புக்களைக் கொண்டிருக்கும். உண்மையான உழைப்பை விடச் சிறுமைத்தனம் உயர்ந்தது என்று அவனுடைய இளைய தோழமைக் குடிமக்கள் அநாயாசமாகப் பிரகடனம் செய்தால், போதை வஸ்துக்களில் தங்களை இழந்தால், பிணைகளைக் கைப்பற்றினால், அவர்களுடைய நாற்றம் எழுத்தாளனின் மூச்சுடன் கலக்கிறது.

இன்றைய உலகின் காயங்களுக்கு நாம் பொறுப்பில்லை என்று சொல்லும் அசட்டுத் துணிச்சல் நமக்கு வருமா?

எப்படியாயினும், உலக இலக்கியம் என்ற வலுவான பிரக்ஞை, உலகின் கவலைகளையும், தொல்லைகளையும்—அவை உலகின் ஒவ்வொரு பகுதியிலும் வெவ்வேறாகக் காணப்பட்டு உணரப்பட்டாலும்—அகற்றும் தனிப் பெரும் இருதயமாய் இருப்பதைக் கண்டு மகிழ்ச்சி அடைகிறேன்.

பழமையான தேசிய இலக்கியங்கள் தவிரவும், கடந்த காலத்தில்கூட உலக இலக்கியம் என்பது தேசிய இலக்கியங்களின் உன்னதத்தை உள்ளடக்கிய தொகுப்பு, பரஸ்பர இலக்கிய பாதிப்புகளின் ஒட்டுமொத்தம் என்ற கருத்து இருந்திருக்கிறது. ஆனால் காலப் போக்கில் ஒரு இடைவெளி ஏற்பட்டது. வாசகர்களும், எழுத்தாளர்களும் மற்ற மொழி எழுத்தாளர்களுடன் ஒரு கால இடைவெளியின் பின்னரே பரிச்சயம் கொண்டனர். சில சமயங்களில் இது நூற்றாண்டுகளாகவும் இருந்திருக்கிறது. இதனால் பரஸ்பர பாதிப்புகளும் தாமதப்பட்டு, தேசிய இலக்கிய உன்னதத்தின் தொகுப்பு, சமகாலத்தவர்களுக்குத் தெரியாமல் அடுத்து வந்த தலைமுறைகளுக்கே தெரிந்தது. ஆனால் இன்று ஒரு நாட்டின் எழுத்தாளர்களுக்கும், இன்னொரு நாட்டின் எழுத்தாளர், வாசகர்களுக்குமிடையே, அங்கங்கே அவ்வப்போதே இல்லாவிட்டாலும், ஏறத்தாழ அப்போதே ஒரு பரஸ்பர பிரக்ஞை ஏற்படுகிறது. இதை நானே உணர்ந்திருக்கிறேன். என் தேசத்தில் அச்சிடப்படாத என்னுடைய புத்தகங்களுக்கு, அவற்றின் அவசர, ஒழுங்கற்ற மொழி பெயர்ப்புக்களையும் மீறி, உலகம் முழுதும் பரவிய, ஏற்கும் இயல்புள்ள வாசகர்கள் கிடைத்திருக்கிறார்கள். ஹைன்ரிஷ் ப்யொல் போன்ற பிரபல மேற்கத்திய எழுத்தாளர்கள் அவைகளை விமர்சனபூர்வமான ஆய்வுக்கு எடுத்துக் கொண்டிருக்கிறார்கள். கடந்த சில ஆண்டுகளில் என் உழைப்பும், சுதந்திரமும் சரிந்து நொறுங்கி விடாமல் காற்றில் ஏதோ புவி ஈர்ப்பு விதிகளுக்கு மாறானவை போல் தொங்கிக் கொண்டிருக்கையில், ஏதோ கண்ணுக்குத் தெரியாத அனுதாபம் நிறைந்த பொது மக்கள் என்ற ஊமைப் பலத்தில் வெறுமையின் மீது இருந்ததைப் போன்ற சமயத்தில் உலக எழுத்தாளர்களின் சகோதரத்துவ ஆதரவை நானே எதிர்பாராத வகையில் நன்றியுடனும், மகிழ்ச்சியுடனும் தெரிந்து கொண்டேன். என்னுடைய ஐம்பதாவது பிறந்த நாளன்று பிரபல மேற்கத்திய எழுத்தாளர் பலரிடமிருந்து வாழ்த்துச் செய்திகள் கிடைத்தபோது வியப்படைந்தேன். என்மீது செலுத்தப்பட்ட எந்த ஆதிக்கமும் கவனிக்கப்படாமல் போய்விடவில்லை. எழுத்தாளர்கள் யூனியனிலிருந்து நான் வெளியேற்றப்பட்ட அபாயகரமான நாட்களில் பிரபல உலக எழுத்தாளர்கள் எழுப்பிய பாதுகாப்புச்சுவர் என்னை மோசமான

கொடுமைகளிலிருந்து காப்பாற்றியது. என்னை அச்சுறுத்திய நாடுகடத்தல் செயலாகும் பட்சத்தில் எனக்காக ஒரு இருப்பிடத்தை நார்வே எழுத்தாளர்களும், கலைஞர்களும் தயார் செய்தனர். இறுதியாக, நோபல் பரிசுக்காக என் பெயர் பிரேரணை செய்யப்பட்டது நான் வாழ்ந்து எழுதுகிற என் தேசத்தில் அல்ல; பிராங்க்வா மொரியாக்கினாலும் அவர் நண்பர்களாலுமே. பிறகு அகில உலக எழுத்தாளர் அமைப்புகளும் தங்கள் ஆதரவை எனக்குத் தெரிவித்தன.

இனிமேலும் உலக இலக்கியம் ஒரு பூடகமான தொகுப்பில்லை, இலக்கிய வரலாற்று ஆசிரியர்கள் கண்டுபிடித்த பொதுமைப் படுத்தலும் இல்லை, ஒரு பொதுவான அமைப்பும், உணர்ச்சியும், மனித சமுதாயத்தின் வளர்ந்துவரும் ஒற்றுமையைப் பிரதிபலிக்கிற, உயிர்ப்பு மிக்க ஆத்மார்த்தமான ஒருமைப்பாடே என்பதை உணர்ந்து, புரிந்துகொண்டு விட்டேன். தேச எல்லைகள் இன்னும் சிவப்பாகிக் கொண்டிருக்கின்றன, மின் கம்பிகளால் சூடேற்றப்பட்டும், மிஷின் துப்பாக்கிகளால் சுடப்பட்டும். உள்நாட்டுக் காரியாலயங்கள் இலக்கியத்தைத் தங்கள் ஆதிக்கத்திற்குட்பட்ட "உள்நாட்டு விவகாரமாக" இன்னும் கருதி வருகின்றன. "எங்கள் உள்நாட்டு விவகாரங்களில் குறுக்கிட உரிமையில்லை" என்று செய்தித் தாள்கள் முழக்கமிடுகின்றன. ஆனால் மக்கள் குவிந்து விட்ட இந்தப் பூமியில் "உள்நாட்டு விவகாரங்கள்" என்று எதுவுமில்லை. மேலும், மனித இனத்தின் ஒரே மோட்சம், ஒவ்வொருவனும், ஒவ்வொன்றையும் தன் அக்கறையாகக் கொள்வதில்தான் இருக்கிறது. கிழக்கத்திய மக்கள் மேற்கத்திய எண்ணங்களில் தீவிர அக்கறை காட்டுவதில்: கிழக்கில் என்ன நடக்கிறது என்பதில் மேற்கத்திய மக்கள் தீவிர அக்கறை காட்டுவதில் சுரணையும், உணர்வும் மிக அதிகமாகக் கொண்ட நுண்ணிய கருவிகளில் மனித குலத்தின் வளர்ந்து வரும் ஒற்றுமையை, உணர்வை முதன் முதலாக மேற்கொள்வதில், செரித்துக்கொள்வதில் இலக்கியம் ஒன்றாக இருந்திருக்கிறது. இதனால்தான் நான் நம்பிக்கையுடன் இன்றைய உலக இலக்கியத்தை, நான் நேரில் பார்த்திராத, நான் பார்க்காமல் போகக்கூடிய பலநூறு நண்பர்களை நாடுகிறேன்.

நண்பர்களே, நமக்கு ஏதாவது மதிப்பு இருக்குமென்றால், நாம் உதவி செய்ய முயல்வோம். ஒன்றுக்கொன்று முரண்பட்டுச் சண்டையிடும் கட்சிகளால், இயக்கங்களால், இனங்களால், பிரிவுகளால்கிழிக்கப்படும் உங்கள் நாடுகளில் காலங் காலமாக ஒன்றுபடுத்தக் கூடிய சக்தியாக, பிரிக்கக்கூடிய சக்தியாக அல்ல, எது இருந்திருக்கிறது? நாட்டைப் பிணைக்கும் மிக முக்கியச் சக்தியான மொழியை, அதன் மக்களை, அதன் தேசிய உணர்வை உன்னதமாக வெளிப்படுத்தும் எழுத்தாளர்களின் இடம் அதன் சாரத்தில்தான் இருக்கிறது. குழப்பம் நிறைந்த இந்நாட்களில், அசூயை கொண்ட மனிதர்களின், கட்சிகளின் பிரசாரங்களை மீறி, மனித இனம் தன்னைத் தானே இன்றைய நிலையில் உணர்வதற்கு இலக்கியம் உதவி செய்யும் சக்தியைப் பெற்றிருக்கிறது என்று நம்புகிறேன். அனுபவத்தின் சாரத்தை ஒரு நாட்டிலிருந்து இன்னொரு நாட்டிற்குச் சொல்லும் சக்தியை உலக இலக்கியம் தன்னுள் கொண்டிருக்கிறது. இதனால் நாம் பிளவு பட்டு, திகைத்து நிற்பதைத் தவிர்க்க, பல்வேறு மதிப்பீடு அமைப்புகள் ஒன்றுடன் மற்றொன்று இணைய, ஒரு நாடு மற்றதின் சரித்திரத்தைச் சரியாகவும் சுருக்கமாகவும், தானே அதை அனுபவித்தது போன்ற பரிச்சயத்தின், தெளிவின் வலுவுடன் தெரிந்துகொள்ள முடியும். ஒரு தேசம் கடுமையான பழைய தவறுகளைத் தவிர்க்க முடியும். அந்த மாதிரியான சூழ்நிலைகளில் முழு உலகையும் அரவணைக்கும் பார்வையின் விஸ்தீரணத்தைக் கலைஞர்களாகிய நாம் வளர்த்துக்கொள்ள இயலும். நடுவில் நின்று அருகிலிருக்கும் வேறெந்த மனிதனையும் கவனிப்பதுபோல் விளிம்புகளுக்குச் சென்று உலகின் பிற பகுதிகளில் நடப்பவற்றை நம் பார்வையினுள் அடக்கிக்கொள்ள முயல்வோம். இவற்றைத் தொடர்புபடுத்தி, உலகப் பரிமாணங்களை அனுஷ்டிப்போம்.

மேலும் எழுத்தாளர்களின்றி வேறு யார்—தங்கள் அரசாங்கங்களின் வெற்றியின்மையைப் பற்றி மட்டுமல்ல (சில நாடுகளில் சோம்பேறித்தன

மாக இல்லாதவர்களுக்கு இதுதான் தங்கள் வயிற்றைக் கழுவ மிகச் சுலப மான வழி)—மக்களைப் பற்றியும் தான், அவர்களின் கோழைத்தனமான அவமான உணர்ச்சியைப்பற்றி, சுயதிருப்தியடையும் பலவீனங்களைப்பற்றி தீர்ப்பு வழங்கமுடியும்? மிகவும் எளிதான முறையில் சிரமமின்றித் தாங்கள் நினைத்ததைச் செய்ய விரும்பும் இளைஞர்கள் பற்றி, கத்திகளை நீட்டி வரும் இளம் வழிப்பறிக்காரர்கள் பற்றி யார் தீர்ப்புச் சொல்வது?

இந்தமாதிரியான கருணையற்ற, வெளிப்படையான வன்முறையினை, எதிர் பாராத் தாக்குதலைச் சமாளிக்க இலக்கியம் என்ன செய்யமுடியும் என்று நம்மைக் கேட்கலாம். ஆனால் வன்முறை தனியே இயங்கமுடியாது. அதற்கு அந்தத் திறன் கிடையாது என்பதை நாம் மறக்கவேண்டாம். பொய்மை யுடன் மிக அத்தியாவசியமாக அது பின்னப்பட்டிருக்கிறது. அவை இரண்டுக்குமிடையே இயற்கையான, மிக அந்தரங்கமான உறவுகள் உண்டு. வன்முறை பொய்மையில் தஞ்சமடைகிறது. பொய்மை தன் ஒரே ஆதாரத்தை வன்முறையில் காண்கிறது. வன்முறையைத் தன் முறையாக எவன் சொல்கிறானோ, அவன் பொய்மையைத் தன் கொள்கையாகக் கொண்டுதான் ஆகவேண்டும். வன்முறை பிறக்கும்போது வெளிப்படை யாக, கர்வத்துடன்கூட, செயல்படுகிறது. வளர்ந்து கொஞ்சம் வலி வடைந்தவுடன், வேரூன்றியவுடன், தான் இருப்பது வெறுமையில் என்று உணர்கிறது; அப்போது அது பொய்கள் என்ற புகை மூட்டத்தில், அவற்றை இனிமையான பேச்சில் உடுத்தி, இறங்கித்தான் வாழவேண்டும். எப்போதும் அது குரல்வளையை வெளிப்படையாக நசுக்குகிறது என்பதில்லை. சாதாரணமாக அது தன் பிரஜைகளிடமிருந்து பொய்மைக்கு விசுவாசத்தை யும், சம்மதத்தையும்தான் கேட்கிறது.

ஒரு எளிய தைரியமான மனிதனின் எளிய நடவடிக்கை பொய்மையில் பங்கு ஏற்காததுதான்; பொய்யான காரியங்களுக்கு ஆதரவு தாராததுதான். அது உலகினுள் வரட்டும், ஆட்சிகூட செலுத்தட்டும். ஆனால் என் உதவியுடன் அல்ல. ஆனால் எழுத்தாளர்களும், கலைஞர்களும் இன்னும் கூடுதலாகவே சாதிக்கமுடியும். அவர்கள் பொய்மையை வெல்ல முடியும்! பொய்மை யுடனான போராட்டத்தில் கலை எப்போதும் வென்றிருக்கிறது. எப்போதும் வெற்றி பெறுகிறது. ஒவ்வொருவரிடத்திலும், மறுக்க முடியாமலும், தீர்க்க மாகவும், உலகத்தில் பலவற்றை எதிர்த்து பொய்மை நிற்க முடியும்! ஆனால் கலையை எதிர்த்து அல்ல.

பொய்மை விரட்டப்பட்டதுமே வன்முறையின் நிர்வாணம் அதன் குரூரத் தன்மையுடன் வெளிப்படும்: அப்போது, வன்முறை பலவீனமடைந்து சரியும்.

நண்பர்களே, உலகம் பழுக்கக் காய்ச்சப்பட்ட இரும்பாக இருக்கும் நேரத்தில் நம்மால் உதவமுடியும் என்று இதனால்தான் நம்புகிறேன். ஆயுதங்கள் வைத்துக்கொள்ளவில்லை என்ற சாக்குச் சொல்லி அல்ல, இலேசான வாழ்க்கையில் நம்மை இழந்தும் அல்ல,—ஆனால் போருக்குச் சென்று.

உண்மையைப் பற்றிய பழமொழிகள் ரஷ்யாவில் மிக விரும்பப்படுகின்றன. அவை சீராக, சில சமயம் பளிச்சென்று, ஒதுக்கிவிட முடியாத, கடுமையான தேசீய அனுபவத்தைச் சொல்கின்றன.

"உண்மையின் ஒரு வார்த்தை உலகத்தைவிடக் கனமானது"

ஸ்தூல வஸ்துவின், சக்தியின நிருபணம் பற்றிய விதிக்குப் புறம்பாக, இந்தமாதிரி ஒரு கற்பனையின் அடிப்படையில் இங்கே நான் என் உழைப் பையும், உலக எழுத்தாளர்களுக்கு என் வேண்டுகோளையும் வைக்கிறேன். ●

தமிழில்: ராமகிருஷ்ணன்

# இது சாத்தியமா?

இந்திரா பார்த்தசாரதி

'கூத்து' என்பது பற்றி ந. முத்துசாமி எழுதியுள்ள கட்டுரையை யொட்டிச் சில கருத்துக்கள்.

கூத்து என்பது நாடகத்தை உள்ளடக்கிய ஒரு விரிவான இயக்கம் என்றே பழந்தமிழ் நூல்கள் கூறுகின்றன. சாந்தி, விநோதம் என்று இரண்டு வகைக் கூத்துக்கள் உண்டு. 'சாந்திக் கூத்தே தலைவனின்பம், ஏந்தி நின்றாடிய வீரிரு நடமவை, சொக்கம், மெய்யே அவிநய நாடகம் என்றிப் பாற்படூஉ மென்மனார் புலவர்' என்று சீவக சிந்தாமணி உரையில் நச்சினார்க்கினியர் மேற்கோள் எடுத்துக் காட்டுகிறார். இவற்றில் மெய்க் கூத்து என்பது, காட்சித் தொழிலாக நிகழ்ந்து அகத்தொடு கலத்த வாகும். 'குணத்தின் வழியதாகக் கூத்தெனப்படுமே' என்று குண நூல் கூறுகின்றது. 'அகத்தெழு சுவையா கைமெனப்படுமே'' என்று சயந்த நூலுடையர் விதி வகுத்துள்ளார். 'நாடகம் நடிகனுடைய மெய்யில் பிரக்ஞையாய் கலத்தல் வேண்டும்' என்ற இக்காலக் கருத்துக்கு இது ஏற்புடையதாய் இருக்கிறது.

'நாடகம் என்பது கதை தழுவி வரும் கூத்து' என்று அடியார்க்கு நல்லார் விளக்குகிறார். 'கதை தழுவாது பாட்டினது பொருளுக்குக் கைகாட்டி வல்லபஞ் செய்வது' அவிநயம்.

கூத்தில் யார் யாருக்கு எந்த எந்த வரிசையில் முக்கியத்வம் அளிக்கப்படவேண்டும் என்பதையும் அக்காலத் தமிழ்நூல்கள் வரையறுத்துள்ளன. 'கூத்தின் அமைதி' ஆடலாசிரியன் அமைதி, தண்ணுமையோன் (editor) அமைதி, குழலோன் அமைதி, யாழாசிரியன் அமைதி, அரங்கின் அமைதி, தலைக்கோல் அமைதி, என்று சிறப்பு வரிசையில் சிலப்பதிகார அரங்கேற்றுக் காதையில் செய்திகள் வருகின்றன. இங்கு நாடக ஆசிரியராகிய கவிஞனுக்கு நாலாவது இடந்தான் கொடுக்கப்பட்டுள்ளது என்பது கவனிக்கத்தக்கது. நாடகத்தை இயக்குகின்றவனுக்கு இரண்டாவது இடம், காட்சிப் பொருளாக இயங்கிப் பார்க்கின்றவர்களுடைய அகத்திலும், புறத்திலும் பௌதிக மாற்றத்தைத் தோற்றுவிக்க வல்ல கூத்து என்ற தூயதொரு நிகழ்ச்சிக்கு முதலிடம்.

அக்காலத்தில் சொல்லைக் காட்டிலும் 'சத்துவ'த்தைத்தான் முக்கியமாகக் கருதினார்கள். 'சத்துவம்' என்றால் குறிப்பு வரையறை. 'வேம்பு தின்றார்க்குத் தலை நடுங்குவதுபோல் தாமே தோன்றும் நடுக்கம்' என்கிறார் பேராசிரியர். இங்கு உணர்வு, தன்னிச்சையில் மெய்ப்பாடாக வெளிப்படுகிறது. இது பிரக்ஞையில் இரண்டறக் கலந்தாலன்றித் தோன்றாது. தன்னிச்சையாக நிகழும் இவ்வுணர்வின் செயல் தொடர்ச்சியை விரிவாக ஆராய்கிறார் அடியார்க்கு நல்லார். 'எண்ணம் வந்தால் தோற்றும் உடம்பில்; உடம்பின் மிகத் தோற்றும் முகத்து; முகத்தின் மிகத் தோற்றும் கண்ணில், கண்ணில் மிகத்தோற்றும் கண்ணின் கடையகத்து' ''ஆடியாடி அகங் கரைந்து, இசை பாடிப் பாடிக் கண்ணீர் மல்க'' என்ற திருவாய்மொழி வரிக்குப், 'பாடி' என்பதனால் சொல்லால் உணர்ச்சியைத் தெரிவிக்க முற்பட்டு, தோற்று, அவ்வளவில், சொல்லுக்கு எஞ்சியது கண்ணீராய் வர'' என்று வியாக்கியானக்காரர்கள் உரை எழுதுகிறார்கள். இது வார்த்தையின் வீழ்ச்சியைத் தெரிவிப்பதாகும். இதனால் காட்சியை வற்புறுத்தும் கூத்தில் சொல்லுக்கு விசேஷ இடம் கொடுக்கப்படவில்லை. சொல்லை உருவாக்கும் கவிஞனுக்கும் நாலாவது இடந்தான் தரப்பட்டுள்ளது.

முத்துசாமியின் கட்டுரைக்கு இவைகளே இலக்கிய ஆதாரங்கள் என்று கருதுகின்றேன். ஆனால்...உரக்கச் சிந்திக்கலாமென்பது என் எண்ணம்.

நாடகத்தில் வார்த்தைக்குச் சிறப்பிடம் இருக்கக் கூடாது என்பது ஒரு கவர்ச்சியூட்டும் கருத்து என்று ஒப்புக்கொள்கிறேன். ஆனால் ... இதன் விளைவுகளையும் பார்க்க வேண்டும். ஒரு குறிப்பிட்ட கால கட்டத்தில் காட்சி இன்பமாகப் பார்க்கின்றவர்களுடைய, நடிகர்களுடைய, பிரக்ஞையில் இரண்டறக் கலக்கும் ஓர் அனுபவம், அந்தக் காலத்துக்கு மட்டும் அர்த்தமுள்ளதாக இருக்கக் கூடியப் பௌதிகப் படிவம் என்பதை நாம் ஏற்றுக் கொண்டாகவேண்டும். தொடர்ந்து நிகழும் சமுதாய ஒப்பந்தத்துக்கு ஒரு நிரந்தர ஏற்பாடு 'சொல்'. இது ஒன்றுதான் காலத்தை வென்று நிற்கக்கூடிய ஆற்றல் பெற்றது. பிரக்ஞையைப் பரிணாம ரீதியாக முழு மலர்ச்சியை அடையச் செய்வதில் இது ஒரு பலஹீனமான ஏற்பாடாக இருக்கலாம். ஆனால் காலத்தின் சவாலைச் 'சொல்' ஏற்பது

போல், கால—இட வரையறைக்குட்பட்ட 'காட்சி'யாய் ஏற்க முடியாது. ஷேக்ஸ்பியர், காளிதாசன் போன்ற நாடக ஆசிரியர்கள், 'சொல்'லை இலக்கியமாக ஆக்கிவிட்ட குற்றத்தைச் செய்திருக்கலாம். ஆனால் ஆங்கில நாடகப் பாரம்பரியம் ஷேக்ஸ்பியரை ஒதுக்கி விட முடியாது.

தமிழில் கூத்தின் பாரம்பரியத்தைப் பற்றிச் சொன்னேன். நாடகங்கள் அக்காலத்தில் வழக்கில் இருந்தன என்றும் நாம் அறிகின்றோம். ஆனால் கொச்சைப்பட்டுப்போன கூத்துக்கலையைத் தவிர, இன்று நமக்கு ஒரு தமிழ் நாடகமும் கிடைக்கப் பெறவில்லை. ஏன்?— 'சொல்'லைப் பின்னுக்குத் தள்ளி 'காட்சி'யை மட்டும் வற்புறுத்திய இம்மரபு, காலத்தோடு போட்டியிட முடியாமல் நசித்துப் போயிருக்க வேண்டுமென்பதே என் கருத்து. 'சொல்' என்பது ஒரு தவிர்க்க முடியாத தீமை. செயலைச் சுட்டும் குறியீடு 'words are part of action and they are equivalents to action' என்று Bronislaw Malionowski கூறுகிறார்.

சொல்லைத் தவிர்க்கப் 'பாவகம்' என்று 24 வகைப்பட்ட குறியீடுகள் (gestures) பண்டையத் தமிழ் நூல்களில் பேசப்படுகின்றன. சாதி, குறிப்பு, சத்துவம் என்ற பிரிவுகளைத் தவிர, பாவகம் என்பது ஒரு தனிக் குறியீடு.

'சாதி'யில் பத்து வேறுபாடுகள்; 'குறிப்பு' என்பது சுவையதன்கண் தோன்றுவது; 'சத்துவம்' அக்குறிப்பின்கண் நிகழ்கின்ற நிகழ்ச்சி. நாடகம், பிரகரணம், பாணம், பிரகசனம், டிமம், வியாயோகம், சமவகாரம், வீதி, அங்கம், ஈகா மிருகம் என்ற பத்து வகைச் சாதியில், 'நாடகம்' ஓர் உட்பிரிவு என்பதனையும் கவனிக்க வேண்டும். இத்தனைக் குறியீடுகளும் ஒரு காலத்தில் 'சொல்'லைப் புறங்கண்டு ஆட்சி செலுத்தின என்ருலும், இப்பொழுது அக்குறியீடுகள் வழக்கொழிந்து போய், எவைகளைக் குறித்து நின்றன என்பதுகூட விளங்கவில்லை. இயல், இசை, கூத்து என்ற முப்பிரிவில், சொல்லுக்குச் சிறப்பிடம் தந்த இயலும், இசையுந்தான் காலத்தை வென்று நிற்கக்கூடிய தகுதியைப் பெற்றிருக்கின்றன என்பது ஒரு முக்கியமான கருத்து.

நாடகங்களில் 'சொல்'லைத்தான் அரியாசனம் ஏற்றவேண்டும் என்று நான் சொல்லவில்லை. 'சொல்' அதற்குரிய இடத்தை வகிக்க வேண்டுமென்பதே என் அபிப்பிராயம். வண்ணம், மணம் ஆகியவற்றைக் குணங்களாகக் கொண்டது மலர். வண்ணத்தையோ, மணத்தையோ வேறுபடுத்தித் தனி நிலையில் காணமுடியாது. மலர், வண்ணம், மணம் ஆகிய மூன்றும் ஒன்றையொன்று பிரித்துக் காணமுடியாத வகையில், ஆனால் அதே சமயத்தில் தங்களுடைய தனித் தன்மையோடு ஒன்ருேடு ஒன்று கலந்திருத்தல் போல, காட்சி, சொல், அநுபவம் ஆகிய மூன்றும் தமக்குள் இசைந்திருக்கும் அற்புதமே கூத்து. இதில் ஒன்றை விட்டு இன்னென்றை வற்புறுத்துவது அடிப்படைக் கருத்துக்கே செய்யும் அநியாயம்.

நாடகத்தை வெறும் உடற் குறியீட்டு இயக்கமாகவோ அல்லது அவிநயமாகவோ மாற்ற முயல்வது சரித்திரம் நமக்கு ஏதும் கற்றுத்தரவில்லை என்பதைத்தான் வலியுறுத்தும். ●

---





# கே. சீனிவாசலுவின் ஓவியங்கள்

தென்னகத்தில், குறிப்பாக, தமிழ் நாட்டில் ஓவியத்துறையில் புதிய அத்தியாயத்தைத் தொடங்கிய ஒரு சிலரில் குறிப்பிடத்தக்கவர் திரு. சீனிவாசலு என்பது ஒரு சிலருக்கு மட்டுமே தெரிந்திருக்க முடியும். இது போன்ற துறைகளில் எல்லையற்ற சிரமங்களுக்கு மத்தியில் உண்மையிலேயே புதுமையை அல்லது மறுமலர்ச்சியை ஏற்படுத்தியவர்களைப் பற்றி எத்தனை சதவீதத்தினர் அறிந்து வைத்திருந்தார்களோ, அதே சதவீதத்தினர்தான் திரு. சீனிவாசலுவைப் பற்றியும் தெரிந்து கொண்டிருக்க முடியும். அதைவிட அதிகமானவர்கள் தெரிந்து வைத்திருப்பார்களேயானல், ஒன்று, இவரது திறமையில் குறையிருக்கலாம். அல்லது நமது மக்கள் திடீரென ஆழ்ந்த அறிவுடையவர்களாக மாறி இருக்க வேண்டும். அப்படித் திடீரென அடிப் புல் மேயும் பக்குவம் நம்மவர்களுக்கு வந்திருக்க நியாயமில்லை.

திரு. சீனிவாசலு ஒரு சிறந்த முன்னோடி ஓவியர் என்பதை அவரது முந்தைய ஓவியங்களிலிருந்தும், சமீபத்திய ஓவியங்களிலிருந்தும் நாம் எளிதாக அறிய இயலும்.

அவர் நம்முடைய மூத்த தலைமுறையைச் சேர்ந்தவர், இங்கு நவீனபாணி ஓவியப் படைப்புகளுக்கு வித்திட்டவர்களில் முக்கியமானவர் என்ற பெருமைகளைவிட, அவர் எந்த அளவுக்குத் தன் படைப்புகள் மூலம் தனித்து நிற்கிருர், படைப்புகள் எந்த அளவுக்குத் தீர்க்கதரிசனமாக அமைந்துள்ளன, அவை எவ்வகையில் நமது கலா சாரத்தைப் பின்னணியாகக் கொண்டு மிளிருகின்றன என்று நாம் அளவிட்டுப் பார்க்கும் போதுதான் அவர் இப்படிப்பட்டத் தகுதிகளைத் தமது படைப்புகள் மூலம் பெற்றிருக்கிருர் என உறுதியாக ஏற்கலாம்.

கடந்த வாரம் சென்னை மாக்ஸ் முல்லர் பவன் (Max Mueller Bhavan) கலாச் சார ஸ்தாபனத்தினரின் ஆதரவுடன் நடைபெற்ற அவருடைய சமீபத்திய ஓவியங்களடங்கிய கண்காட்சியைப் பார்த்தபோது, அவருடைய முந்திய படைப்புக்களிலிருந்து இவை எவ்வாறு கொஞ்சம், கொஞ்சமாக மாறி ஒரு இலக்கை அடைந்திருக்கின்றன என்பதை உணரலாம். அதோடு 30 வருடங்களுக்குப் பிறகு தன் சமீபத்திய மாறுபட்ட படைப்புகளின் மூலம் அதே சீனிவாசலுவையும் காணலாம்.

இருபது ஓவியங்கள் அடங்கிய காட்சியில், எல்லா ஓவியங்களுமே ஒவ்வொரு வகையில் சிறந்தது. அதில் குறிப்பாகச் சில ஓவியங்கள், பாராட்டும் வகையில் இருந்தன.

'கிருஸ்து' ( Christ), 'ஊர்வலம்' (Procession), 'கிளியுடன் பெண்' (Lady with Parrot) 'வேளாங்கண்ணி' (Velankanni), 'கிருஷ்ண பகவானின் வாழ்க்கை' (Life of Krishna), 'பல்லக்கு தூக்குவோர்' (Palanquin Bearers), போன்றவற்றைக் குறிப்பிடலாம்.

எல்லா ஓவியங்களிலும் உருவங்களுக்கு ஏற்றவாறு வண்ணங்கள் திறமையோடு, அர்த்தத்தோடு கையாளப்பட்டிருந்தன. 'கிருஷ்ண பகவானின் வாழ்க்கை' என்ற படத்தில் எந்த அளவுக்கு வண்ணங்கள், எண்ணிக்கையில் அதிகமாக உபயோகிக்கப் பட்டனவோ, அதற்கு நேர்மாருக 'கிருஸ்து', 'ஊர்வலம்' போன்ற ஓவியங்களில் வண்ணங்கள் அரிதாகப் பயன்படுத்தப்பட்டு, ஒரு நல்ல கலைஞரால்தான் இந்த இரு நிலைகளிலும் இருந்து வெற்றிப் படைப்புகளைத் தரமுடியும் என நம்மைப் பூரணமாக நம்பவைக்கிருர்.

சில ஓவியங்களில் அடிப்படை வண்ணங்களான (basic colours) சிகப்பு, பச்சை, ஊதா, மஞ்சள் ஆகியவற்றைத் தைரியமாக, நம்பிக்கையுடன்பயன்படுத்தி நம்மைப் புதுமையிலிருந்து பழமைக்கும் அழைத்துச் செல்கிருர். உதாரணத்திற்கு 'அனுமான்' (Hanuman) என்ற தலைப்புடைய ஓவியத்தைக் குறிப்பிடலாம்.

இங்கு குறிப்பிடப்பட வேண்டிய ஒரு விஷயம், அத்தனை ஓவியங்களையும் அவர் உலோகத் தகட்டின் மேல் (tin sheets) உருவாக்கி ஒரு புது மீடியத்தை (medium) மிகச் சாமர்த்தியமாகக் கையாண்டிருக்கிற விதம், பார்ப்போரை எளிதில் கவர்ந்து விடும்.

மொத்தக் காட்சியைப் பார்த்து வெளியேறும்போது திரு.சீனிவாசலு ஐம்பதுவயதை நெருங்கும் பிராயத்தினராளுலும் ஒரு இளைஞனுக்கு இருக்கும் புதிய சோதனைகளில் ஈடுபடும் உற்சாகத்தோடும், வேட்கையோடும், இவ்வோவியங்களைப் படைத்திருக்கிருர் எனத் தெளிவாகத் தீர்மானிக்கலாம்.

—கே. எம். ஆதிமூலம்

## ஆறு, ஒரு காலத்தில்

காகிதக் கப்பல்களால்
என்விலாவில் சிறுவர்கள் கிச்சுகிச்சு மூட்டுகிறார்கள்.
என்னை ஒரு குட்டையாய்
எருமைகள் மாற்றிவிட்டன
அதிலும் பழைய பூக்களும் படிந்தன
என் கூந்தலில்
ஒவ்வொரு மாலையும்
கோயில்களின் நெற்றியில்
மணிகள் புரளும் போது
படித்துறையில் ஒருவன்
கால் கழுவுவதைக் காண்கிறேன்
ஊட்டி வளர்த்த
கொக்குகளும் மீன் கொத்திகளும்
பறந்து விட்டன என் மூலைக் கண்ணிலிருந்து
அவற்றுடன் என் கரங்களில் உறங்கிய
அரசரும் புலவரும் கூடப் பறந்துவிட்டனர்
நானொரு சாக்கடையாகி
இப்போது ஒருவர்க்கும் பயனில்லை
இந்த இனிய நகரத்தின்
ஆறு, ஒரு காலத்தில்
வைகையால்.

## முறையீடு

மாலையில்
கூடும் போக்குவரத்தில்
வீதி வீட்டின் பக்கம்
சாயும் பொழுது

அப்போதுதான் நான் அசைந்து
மேஜையிலிருந் தெழுந்து
என் கண்களின் தூசியைத் துடைப்பேன்

கண்ணாடி அணிந்து
இரவின் ஒவ்வொரு மூலை முடுக்கிலும்
நிலைகொள்ளாமல் என்னைத் தேடுவேன்

என்காலடி ஓசை கேட்டு
நடைபாதை காட்டிக் கொடுக்கும்
சந்து ஒன்றை என்முகத்தில்
அறைந்து மூடும் பறநாய் ஒன்று

உலகத்தை மாற்றிக் கொண்டேன்
ஒரு மேஜை நாற்காலிக்காக
நான் முறையிடக் கூடாது

## தமிழ்

ஆங்கிலச் சங்கிலியில்
பிணைத்த என் நாக்குடன்
திரும்பி வந்தேன்
ஒருதலை முறைக் கப்புறம்
உன்னிடம்

திராவிடத் தும்பின் நுனியில்
நான் துடிக்கிறேன்
உனக்காக
என்பசி அடங்காமல்

நான் தயங்கி
தடுமாறுகிறேன்
தூக்கத்திலிருந்து
உலுக்கி எழுப்பிய
சோர்ந்த மொழியின்

பசையைக் குரளில்
பற்களும் அண்ணமும் இதழ்களும்
பேசும் போது புதிதாய் உணரும்

இப்போது நீ
செல்லுலாய்டில் தொற்றிக்கொண்டு
திரையரங்கத் தாழ்வாரங்களில்
சுற்றுகிறாய்.

ஆங்கிலத்தில்: ஆர். பார்த்தசாரதி

தமிழில்: பதி

# நினைவுப் பாதை*

சுமார் பத்துப் பதினைந்து ஆண்டுகளாகத் தமிழில் சிறுகதைகள், நாவல்கள், விமர்சனங்கள் என்று இலக்கியத்தின் பல்வேறு பிரிவுகளிலும் ஆழ்ந்த நுண்ணறிவோடும் விசேஷ சிரத்தையோடும் உழைத்து வரும் நகுலனின் எழுத்துக்கள் இன்று பலரையும் தன்பால் ஈர்க்கின்றன. இவருக்குப் பிறகு எழுத ஆரம்பித்தவர்களின் எழுத்துக்கள் மூலம் பெற்ற பயிற்சி நகுலனை அணுகிப் படித்து அனுபவிப்பதைச் சுலபமாக்கியது எனலாம்.

மரபிலிருந்து முற்றிலுமாக விலகி வித விதமாகச் சிறு கதைகள், நாவல்கள் எழுதிப் பார்க்கும் ஆர்வம் நகுலனுக்கு நிறையவே இருக்கிறது. உத்தியில் மிகுந்த கவனமும்—சொல்வதை அழுத்தி லேசில் பிடிபடாத நோக்கில் சொல்வதில் சிரத்தையும் இருக்கிறது. இவை பரந்து சமூகத்தின் பல்வேறு அம்சங்களைத் தொடாவிட்டாலும் தான் எடுத்துக் கொண்ட மனிதர்களைப் பற்றி, அவர்களின் வாழ்க்கை, வாழ்க்கையின் இலக்கு, அதை அடைய எடுத்துக் கொள்ளும் முயற்சிகளைப் பற்றி உணர்ச்சி வசப்படுதல் இன்றி—அறிவின் தெளிவோடு மிகுந்த நேர்த்தியோடு—அதன் விளிம்பு வரையில் கண்டு சொல்ல முடிகிறது.

'நிழல்கள்', 'ரோகிகள்': தொடர்ந்து மூன்றாவது நாவலாக 'நினைவுப் பாதை'. மற்ற இரு நாவல்கள் போலவே—டயரியான நினைவுப் பாதையும் வாழ்வின் ஒரு கால கட்டத்தின் தவிர்க்க இயலாத மனப்போக்கின் தொடர்ச்சியைச் சொல்கிறது. இரண்டு ஆண்டுகள் தொடர்ந்து நவீனன் என்னும் எழுத்தாளன் அடுத்தடுத்த கால கட்டத்தில் தன்னைப் பற்றியும், நண்பர்களைப் பற்றியும், தனக்கு மிகவும் வேண்டிய ஒரு பெண்ணைப் பற்றியும் எழுதும் நினைவுக் குறிப்புக்களாகப் பெருகி, மனம் பிசகிய நினைவோடு முடிவடைகிறது.

நகுலன், கதை என்னும் அம்சத்தை உதறித் தள்ளிவிட்டு வாழ்க்கையின் இடையருத இழைகளைப் பற்றித் தன் நோக்கில் எழுதி இருக்கிறார். இது இந்த நாவலில் மட்டும் காணப்படும் விசேஷ அம்சமல்ல. அவர் படைப்பு முழுவதிலும் காணப்படுவதும் இதுதான்.

நண்பர்களின் சந்திப்பு, பேச்சு, விவாதம், வாழ்க்கைப் பிரச்னைகள் — மீண்டும் சந்திப்பு—என்ற இழைகளையே மீண்டும் மீண்டும் சொல்லி வாழ்க்கைக்கு அர்த்தத்தையும் கனத்தையும் ஏற்றுகிறார். இது ரொம்பவும் இயல்பாகக் கண்டு கொள்ள முடியாத விதத்தில் இருப்பதை மிகவும் சிறப்பாகச் சொல்ல வேண்டும்.

நவீனன், ஓர் எழுத்தாளன். இவன் நண்பன் சிவன், ஒரு கவிஞன், இன்னொரு நண்பன் நாவலாசிரியன், இவன் அடைய முடியாமல் போன சுசீலா—இவர்களின் வாழ்க்கையை நினைவு கூர்ந்து பார்க்கையில் இவனுக்கே நினைவு பிசகி விடுகிறது. எல்லாம் மாறி மேலும் கீழுமாகப் போய்விடுகிறது.

நவீனன்—கவியான இவன், எழுத்தாளனை நடராசன்—பற்றிய குறிப்புக்கள் மிகவும் சிறப்பாக உருவாகி, பின் பகுதியில் நாவலின் கட்டுக்கோப்புத் தகர்ந்து சரிவதுபோல் தோன்றினாலும் முடிவை எட்டுகையில் எல்லாம் சரியாக, நேர்த்தியாக இருப்பதாகவே படுகிறது.

'எனக்கும் கற்பனையில் நம்பிக்கையில்லை; ஏனென்றால் கற்பனை என்பதை இவர்கள் சூன்யம் என்று ஏகோபிக்கிறார்கள். நான் சூன்யவாதியில்லை. அனுபவத்தை அப்பட்டமாக மொழி பெயர்ப்பதைக் கலை இல்லை என்கிறார்கள். ஆனால் எனக்கு அனுபவம் இல்லாவிட்டால் எழுதவே தோன்றுவதில்லை. அப்படியானால் அனுபவத்தை எழுத்தில் வடிக்கையில் வரும் விளைவுதான் கற்பனை என்று தோன்றுகிறது. இதில் எங்கேயோ எதுவோ பிசகுகிறது மாதிரி இருக்கிறதோ? அப்படி ஒன்றுமில்லை; டயரி முழுவதும் படித்ததும் எல்லாம் சரியாகிவிடும். நாவலில் கதை முக்கியமல்ல; பாத்திரம் முக்கியமல்ல; சமூகச் சித்திரம்முக்கியமல்ல: பின் என்ன தான் முக்கியம்? ஒரு வேளை வார்த்தைகள்? ஒருவேளை, மனதில் அழியாமல் நிற்கும், அணுக, அணுக அகன்று செல்லும் அனுபவத்தின் அதீத இயல்புகள்? இந்த நாவலில் நான் உங்களுக்கு என்னைப் பற்றி, ஒரு கவிஞனைப் பற்றி, ஒரு நாவலாசிரியனைப் பற்றி, ஒரு பெண்ணைப் பற்றி, மனதின் ஒரு அவச நிலையைப் பற்றிக் கூற நம்புகிறேன். இவர்கள் வாழ்க்கையை, இந்த அனுபவங்கள், கதையைவிட சுவையாக இருக்கக் கூடுமென்று நினைக்கிறேன். நீங்கள் என்ன நினைக்கிறீர்களோ? ஆனால், என்றுதான் என்னால் உங்களைத் திருப்திப் படுத்த முடிந்திருக்கிறது? ஏன், இன்றுகூட

---

*நினைவுப் பாதை (நாவல்): நகுலன்
வெளியீடு: டாஸ் புக் சென்டர், கேப் ரோடு, நாகர்கோவில்-1.
விலை: ரூ. 6/-

உங்களைத் திருப்திப்படுத்த வேண்டும் என்று நான் எழுதும் இந்த நாவல்கூட உங்களைத் திருப்திப்படுத்தாது என்பது எனக்குத் தெரியாமல் இல்லை. ஏன், இன்று வரையில் எனக்கே நான் எழுதியது ஒன்றும் அப்படித் திருப்திகரமாகப் படவில்லை. பின் ஏன் எழுத வேண்டும். நியாயமான கேள்வி. எழுதாமல்?'

தன்னைத் தானே விமர்சனித்துக்கொள்ளும் சமகால எழுத்தாளனின் நாட்குறிப்பு என்பதற்கு மேலே வெகுவாக உயர்ந்து, மிகவும் குறிப்பிட்டுச் சொல்லக் கூடிய நாவவாக 'நினைவுப் பாதை' இருக்கிறது.

நாவல் என்று ஏற்றுக்கொள்ளப்பட்டு இருப்பதிலிருந்து முற்றிலும் மாறுபட்ட நாவலாக நினைவுப் பாதை இருப்பதால்—அதன் நுண்ணிய இழைகள் முதல் நோக்கிலேயே புலப்படாமல் போவது சாத்தியமே. கொஞ்சம் சிரத்தையும் பயிற்சியும் இருக்குமானால் நகுலனின் கலாபூர்வமான எழுத்தைப் படித்து அனுபவிப்பது என்பது சாத்தியமாகி விடும்.

—சா. கந்தசாமி

---

# அக்கம் பக்கம்

அமெரிக்காவில் விஸ்கோன்சின் பல்கலைக் கழகத்தில் இந்திய இலக்கியம் போதிக்கும் திருமதி உஷா பிரியம்வதா சமீபத்தில் புது டெல்லி வந்திருந்தபோது, வெளிநாடுகளில், குறிப்பாக அமெரிக்காவில் இந்திய இலக்கியம் பற்றி ஒரு image எப்படி இருக்கிறதென்று கூறியதாகத் திருமதி சரஸ்வதி ராம்நாத் நமக்குத் தெரிவித்திருக்கிறார்.

உலக இலக்கியத்தில்—இந்திய இலக்கியத்தின் பிரிவில்—ராஜா ராவ், ஆர். கே. நாராயண், வேத்மேஹதா, ஜாப்வாலா ஆகிய இந்திய எழுத்தாளர்களின் நூல்கள் இடம் பெற்றுள்ளன. இவர்களில் எவருமே இந்திய மொழிகள் எதிலும் எழுதாத, எழுத இயலாத இந்திய எழுத்தாளர்கள் என்பது முக்கியமான ஒன்று. இவர்கள் எழுதுவதெல்லாம் ஆங்கிலத்தில்தான். இப்படி இவர்களால் எழுதப்பட்டிருக்கும் ஆங்கிலப் படைப்புக்களை விட இந்திய மொழிகளில் எழுதப்பட்டிருக்கும் படைப்புக்களில் பல சிறப்பாகவும், தரமாகவும், இந்தியத் தன்மை கொண்டவையாகவும் இருக்கின்றன.

உஷாவின் கூற்றின்படி ஆர். கே. நாராயணனின் மிகச் சாதாரணமான ஒரு நூல் 'இந்திய இலக்கியம்' என்ற பெயரில் அமெரிக்கப் பல்கலைக் கழகங்களில் போதிக்கப்பட்டு வருகிறதாகவும் தெரிகிறது.

தேசிய இலக்கிய நிறுவனங்களும், உலகின் மற்ற நாடுகளுக்கு இந்திய இலக்கியத்தை அறிமுகப்படுத்தும் அமைப்புக்களும் இலக்கியப் பிரக்ஞையுடன் செயலாற்றாத வரையில் இந்த மாதிரிக் குறைபாடுகள் நிகழ்வது தவிர்க்க முடியாதது.

⁂ ⁂ ⁂

வருகிற டிசம்பர்—ஜனவரி 'கசடதபற' இதழ்களைச் சேர்த்து கூடுதலான பக்கங்களுடன் கொண்டுவரத் தீர்மானம். எனவே அடுத்த இதழ் ஜனவரி 1973ல் தான் வெளிவரும்.

—நா. கிருஷ்ணமூர்த்தி

---

# ஹைய்ன்ரிஷ் ப்யோல்

இலக்கியத்துக்கான நோபல் பரிசு இந்த ஆண்டில் (1972) ஹய்ன்ரிஷ் ப்யோலுக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது. போருக்குப் பிந்திய ஜெர்மன் எழுத்தாளர்களில் அமைத்துக் கொண்ட Group 47ல், குந்தர் க்ராஸ், ஹென்ஸன்ஸ் பெர்ஜர், யுவே ஜான்ஸன் ஆகியவரோடு சேர்ந்தவர் ப்யோல். உருவத்திலும், உள்ளடக்கத்திலும் ஒரு பாசாங்கில்லாத எளிமையும், கவனிப்பும், புரிந்துகொள்ளலும் உள்ள ப்யோலின் எழுத்துக்கள் அரசியல் அல்லது இலக்கிய சித்தாந்தங்களில் ஒரு துருவப் பார்வையை மேற்கொள்ளாதவை. இலக்கியத்தில்கூட ஒரு தீவிர சித்தாந்தம் என்பதும் பிற்போக்குத்தனமானது என்று கருதும் ப்யோல் மரபான வழியில், மரபான முறையில்தான் எழுதுகிறவர். ஜெர்மனியின் வீழ்ச்சிக்குப் பிறகு, வரலாறு, சமூகம், ஆன்மிகம், சான்றாண்மை ஆகியவற்றில் ஒரு குற்ற போதத்துடன் எழுதுகிற ஜெர்மனியில் சக எழுத்தாளர்களிலிருந்து மிகவும் மாறுபட்டவர் ப்யோல். நடை, உருவம், உள்ளடக்கம் முதலியவற்றில் பரிசோதனை செய்யும் குந்தர் கிராஸ் போன்ற எழுத்தாளர்களைக் காட்டிலும், நடை, தொனி, மனோபாவம் விஷயங்களில் ஃபாண்டேன், தாமஸ்மன்னுக்கு நெருங்கியவர் அவர். வாழ்க்கையால் பாதிக்கப்படும் அரசியலைக் குந்தர் கிராஸ் எழுதுகிறார் என்றால், அரசியலால் பாதிக்கப்பட்ட வாழ்க்கையை ப்யோல் எழுதுகிறார்.

ஹய்ன்ரிஷ் ப்யோலுக்கு 55 வயதாகிறது. பெருமைதரும் பதினெட்டு புத்தகங்களைக் கையில் வைத்திருக்கும் ப்யோல் ஒரு நாடகமும் எழுதியிருக்கிறார். ப்யோல் சொல்கிறார் கலையைப் பற்றி:

'The point is not to put life into the case or box, the point is that life has to be created in it and jump out of its own accord. And so on and then just simply write the whole thing down'.

—ஞானக்கூத்தன்



ஓவியம் : பி. கிருஷ்ணமூர்த்தி

ஞானக்கூத்தனின்

கவிதைத் தொகுப்பு

# அன்று வேறு கிழமை

விரைவில் வெளிவருகிறது. விலை: ரூ. 5-00

முன்பணம் அனுப்புவோருக்கு

விலை: ரூ. 4-25

தங்கள் முகவரியை மணியார்டரில்

தெளிவாகக் குறிப்பிடவும்.

நா. கிருஷ்ணமூர்த்தி, 1 தேவடித் தெரு,

மயிலாப்பூர், சென்னை 4.

## புதிய புத்தகங்கள்

### நாவல் இலக்கியம்

**எழில் முதல்வன்**

வெளியீடு :

தமிழ்ப் புத்தகாலயம்

576 பைக்ராப்ட்ஸ் ரோடு

சென்னை 5

விலை : ரூ. 4-00

### இன்குலாப் கவிதைகள்

**கவிஞர் இன்குலாப்**

வெளியீடு :

கார்க்கி வெளியீடு

22 பிள்ளையார் கோயில் தெரு

சென்னை 5.

விலை : ரூ. 1-50

### கடலோடி

**நரசய்யா**

வெளியீடு

வாசகர் வட்டம்

14 தணிகாசலம் செட்டித் தெரு

சென்னை 17

விலை: ரூ. 5-25

Published by N. Mahaaganapathy 47, Nallathambi Mudali Street, Madras-5. Printed by M. K. Swamy at Prem Press, 8, M. K. Amman Koil St., Madras-4. Edited by N. Krishnamoorthy No. 1, Devadi Street, Madras-4.